Regd. No. 2975 ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 313

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM–631503.

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1974௵ ஆடி மாத வெளியீடு



ஆழ்வார் திருவடிகளே சரணம்

## பகவத்விஷயப் பதிப்புபற்றி

திருவாய்மொழி வியாக்கியானங்களில் ஒன்பதினாயிரப்படி, இருபத்துநாலாயிரப்படி, ஈடுமுப்பத்தாறுயிரப்படி ஆகிக இம்மூன்று வியாக்கியானங்களை மட்டும் அச்சிட முடிவுசெய்தோம். இப்பெரிய காரியத்திற்கு வேண்டிய அச்சுத்தாள் இப்போதுதான் சேகரிக்கப்பட்டுக் கைவச மெய்தியது. அச்சுப்பணி ஆரம்பமாயிற்றென்றுகொள்க. இப்பதிப்புக்கு நன்கொடையளித்தவர்கள் ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. திருமலை திருப்பதி பெரியகேள்வி ஜீயர் ஸ்வாமி 2000/- ரூ. T. C. A. ஸ்ரீனிவாஸவரதன், (New Delhi) ரூ. 400/-.

## ஸ்ரீ ராமாநுஜன் 27-வது ஸம்புடத்திற்கு சந்தா வரவுகள்

V. P. சடகோபன், Bombay
M. N. சிங்காரம்மா, மண்டயா
S. ராமசாமி ஐயங்கார், சிதம்பரம்
S. ஸ்ரீநிவாஸன, உடுபலைப்பேட்டை
P. ஸ்ரீரங்காசாரி, திருநெல்வேலி
T. K. S. கோபாலரத்னம் Madras-4
T. M. ராமாராவ், மதுரை
K. V. ஸ்ரீநிவாஸாசாரி, Madras-5
துரை ரங்கராஜஂ, நாச்சியார்நந்தல்
கோவிந்தசாமி, கிழாய்
திருவேங்கடத்தான், கோயம்மள்ளி
T. வேங்கடவரதன், Madras-34
R. ராமசந்த்ர ஐயர், Madras-4
கோவிந்தராசன், கொண்டலம்பட்டி
R. ஸ்ரீநிவாசன், நேமத்தான்பட்டி
Dr. வைத்யவித்வான் விஜயஸாரதி, புருகபள்ளி
M. ரங்கசாமி ஐயங்கார், Madras-1
ராமசேஷாத்ரி ஐயங்கார். வேலூர்
V. வெங்கடவரதன், Madras-49
V. ஸ்ரீதரன், பிலாஸ்பூர்
P. ரங்கநாதன், பாண்டிச்சேரி
N. T. ரகுராமக்ருஷ்ணன், Madras
M. N. ரங்காசாரி, Madras-14
க்ருஷ்ணசாமி ஐயங்கார் போரவூரணி
R. திருமலை ஐயங்கார், Madras-53
R. ராஜகோபாலாசாரியர், காரைக்கால்
K. S. நாராயணாசாரியர், தார்வார்
வெங்கடேஸ்வர ஐயர், New Delhi
S. ரங்கநாதன், பெங்களூர்
K. ராமஸ்வாமி, கடலூர்
K. R. ராமையா, கும்பகோணம்
A. K. நாராயணன், New Delhi
T. M. ஸ்ரீநிவாஸன், Bombay
சங்கரலிங்கதாஸர், மதுரை
T. A. சேஷாசாரியர், Madras-4
P. B. திருவேங்கடாசாரியர், அண்ணன் பெருமாள்கோவில்
P. C. ஆனந்தன், பங்களாபுதூர்
A. R. ரங்கநாதன், Madras-1
V. T. ஆழ்வார், மதுரை
V. ஸ்ரீநிவாஸன், Bombay
K. K. திருமலாசாரியர், அலஹாபாத்
S. சேஷாத்ரி, குன்னத்தூர்
K. M. ராமாநுஜாசாரியர், கீரநல்லூர்
V. N. O. Krishnaswamy Chettiar & Sons, Salem
N. K. ஸ்ரீநிவாஸன், பெங்களூர்
T. N. மகரபூஷணமையங்கார், தென்திருப்பேரை
K. V. ராஜகோபாலன், குற்றாலம்
T.C. ஜகந்நாதன், ஆலத்துடையான்பட்டி
P. R. சௌரிராஜன், New Delhi
N. R. ராகவஸாமி ஐயங்கார், பரமகுடி
V. ஸ்ரீநிவாஸ ஐயங்கார், அட்வகேட் ,,
பெரியநம்பி ஸ்ரீநிவாசன், ஒற்றைக்கடை
V. S. லக்ஷ்மணன், பெங்களூர்
K. ரங்கராமாநுஜம் மாளிகைமேடு (ஜீவியச் சந்தாதாரர்) ரூ. 100
T. A. ஸ்ரீநிவாஸன், மதுரை
T. ராமஸ்வாமி ஐயங்கார் Madras-94
V. R. ராகவன் சேலம்
C. R. நாராயணஸ்வாமி, சின்னியம் பாளையம்

# ஸ்ரீ ராமாநுஜன்—313



ஆசிரியர்:
மஹாமஹோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 27 | ஆனந்த வருஷ ஆடி மாத வெளியீடு | ஸஞ்சிகை 1

## "ஸந்திமிச்சந்தி ஸாதவ:"

மாச்சரியத்தை விலக்கி ஸமரஸப்பான்மையை வளர்க்கவேணுமென்கிற மனோபாவம் அனைவர்க்குமுண்டாகாது; விசாலமான மனம்படைத்த சில பெரியார்களுக்கே அஃது உண்டாகும். அதிலும் ஆர்ஜவம், கௌடில்யம் என்று இரண்டுண்டு. உள்ளத்துள்ளே குடிலமான எண்ணங்களை வைத்துக்கொண்டு ஸமரஸப் பேச்சுப் பேசுபவர்கள் மேன்மேலும் மாச்சரியத்தை வளரச் செய்வதற்கே விதைவிதைப்பவராவர்; ஸர்வாத்மநா ஸாமரஸ்யமுண்டாகமாட்டாத விஷயங்களில் ஸமரஸப்பேச்சுக்கள் பயன்படவும்மாட்டா. கண்ணபிரான் தீயபுந்தி சிறிதுமின்றிக்கே தூயபுந்தியுடன் ஸாமரஸ்யத்திற்குப் பாடுபட்டே 'இன்னார் தூதனென நின்றான். முடிவு என்னாயிற்று? *வீரபோக்யா வஸுந்தரா* என்றாயிற்றென்பது ப்ரஸித்தம். ந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகை நமக்கு வருவதில்லை. அதன் ஆடிமாதச் சஞ்சிகையில் 'ஸமரஸப்ரியன்' என்று கையெழுத்திட்ட ஒருவருடைய ஸமரஸ விருப்பக் கட்டுரையொன்று வெளிவந்திருப்பதாக ஸ்ரீ வைஷ்ணவஸுதர்சன பத்ரிகையினாலறிந்தோம். அப்பத்திரிகையின் ஆசிரியர் ஸமஞ்ஜஸமாக எழுதி யிருப்பதையுங்கண்டோம். சென்னையில் வாழும் பிரபல அட்வகேட் ஸ்ரீமதுபயவே பிள்ளைபாக்கம் பஹுகுடும்பி. அனந்தாசாரியர் ஸ்வாமி ஸமரஸப்ரியரின் உண்மையான மனப்பான்மையை யுணர்ந்து ஒரு கட்டுரை யெழுதி நமது ஸ்ரீ ராமாநுஜனுக்கு உதவியருளினர். அதை நாம் மிக்க மகிழ்ச்சி யோடு வரவேற்று இவ்விதழில் பிரசுரம் செய்கிறோம்; தூய மனத்தினர் கண்டு களிப்பது. உண்மையாக ஸாமரஸ்யத்திற்கு ஆசைப்படுமவர்கள் முந்துறமுன்னம் தாங்கள் சில விஷயங்களிலாவது அதனை ஆசரணையில் காட்டினால் உலகத்திற்கு நம்பிக்கை யுண்டாகும். ... ... ... ...

# ஆஸ்திகநாஸ்திகரின் அநியாயவார்த்தைகள்

(பத்ராதிப ப்ரதிநிதி தி. அ. அனந்தாழ்வான்.)

காஞ்சீபுரம் யானைத் திருமண் விவகார சம்பந்தமாகக் குமுதமென்னும் பத்திரிகையில் (8—8—74 தேதி கொண்டதில்) சிற்சில சிறுகட்டுரைகள் வெளிவந்துள்ளன. அவற்றில், ஆஸ்திக நாஸ்திகரென்றும் 'அஹோர' என்றும் வழங்கப்பட்டுவருமொருவருடைய நாஸ்திகவாதக் கட்டுரையும் வெளிவந்துள்ளது.

வேதபுராணேதிஹாஸங்களை நம்பாதிருந்த இவர் "ஆகமங்களின்படி பெருமாளின் நெற்றியில்........." என்று எழுதியிருப்பதால் ஆகமத்தையாவது ஒப்புக் கொள்கிறாரேயென்று ஸந்தோஷிப்பதாகப் பலர் கூறினர்.

ஆதியில் பெருமாளின் நெற்றியில் வடகலைத்திருமண்ணோ தென்கலைத்திருமண்ணோ எதுவும் கிடையாது என்கிறாரிவர். எம்பெருமானுடைய திருவடிகளையேயன்றோ நாம் நெற்றியில் தரிக்கின்றோம்? ஆகவே அர்ச்சாவதார எம்பெருமானுக்கு அவனுடைய திருவடிகளையேயா திருநெற்றியில் ஸமர்ப்பிப்பது என்று சிலர் வாதம் செய்வதுண்டு............இப்போது நருஸிம்ஹப்ரியா என்னும் பெயரால் வெளிவந்துகொண்டிருக்கின்ற அஹோபிலமடத்துப் பத்ரிகையானது ஸ்ரீமத்பரமஹம்ஸ. இஞ்சிமேட்டழகிய சிங்கர் ஆஸ்தானத்தை யலங்கரிப்பதற்கு முன்னே வேதாந்த தபிகையென்னும் பெயரால் பல வருடங்கள் மாதந்தோறும் நடந்துவந்தது. (இது நாற்பது வருஷங்களுக்குமுந்தியென்று கொள்வது.) அப்போது நமது பத்ராதிபஸ்வாமி(P B.A.)அப்ருதலஹரியும் ஆரம்பிக்கவில்லை, ஸ்ரீராமாநுஜனும் ஆரம்பிக்கவில்லை. ஸ்ரீராமாநுஜஸித்தாந்த வைஜயந்தீ என்னும் பெயரால் மாதப்பத்திரிகையொன்று நடத்திவந்தார். (வைகுண்டவாஸியான வடகரை ராமாநுஜய்யங்கார் ஸஹகாரியாயிருந்து நடந்துவந்த பத்ரிகை அது.) அக்காலத்தில் வேதாந்த தீபிகையென்கிற (மேலே ப்ரஸ்தாவித்த) மடத்துப்பத்ரிகையில் அர்ச்சாமூர்த்திகளின் திருமண்காப்பைப்பற்றிய சில துர்வாதங்கள் வெளிவந்திருந்தன. இப்போதைய ஸமரஸப்ரியன் பேச்சுக்களும் ஆஸ்திக நாஸ்திகரின் பேச்சுக்களுமே அப்போது அப்பத்திரிகையில் வெளிவந்தன. அவற்றுக்கு ஸ்ரீ ஸ்வாமி "அர்ச்சாவதாரத் திருமண்காப்பு" என்னும் மகுடங்கொண்டதொரு வியாஸத்தை விரிவுக்கு அஞ்சாமல் எழுதித் தமது பத்ரிகையான ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்த வைஜயந்தியில் வெளியிட்டு ஆஸ்திகர்களை யுகப்பித்தார். அந்த வியாஸத்திலிருந்து சில பகுதிகளை மட்டும் இங்குப் பிரசுரிக்கின்றேன்.

## "அர்ச்சாவதாரத் திருமண்காப்பு"

கங்காநதீதீரத்து ஸந்நிதிகளிலுள்ள எம்பெருமான்களுக்கு கங்காதீர்த்தத்தினால் திருமஞ்சனம் ஸமர்ப்பிப்பது அநாதிஸித்தமான வழக்கம். இதில் யாருக்கும் எவ்விதமான விப்ரதிபத்தியும் தோன்ற இடமில்லை. இப்படியிருந்தும், "கங்கைக்கு விஷ்ணுபதீ என்று பெயராதலால் விஷ்ணுபாத தீர்த்தத்தை விஷ்ணுவுக்கே அபிஷேகம் செய்வது அபசாரம்" என்று ஒரு கிளர்ச்சியைச் சிலர் உண்டாக்கினார்களாம். "ஆமாம் ஆமாம், தன் பாததீர்த்தத்தைத் தானே உபயோகங்கொள்வது பிசகுதான்" என்று சிலர் அதை அபிநந்தித்தார்களாம்.

"ஸ்ரீமாந் என்பது நாராயணனுக்கே உரித்தான விசேஷணமாதலால் அதனை நப்போன்றவர்களுக்கு இடுதல் ஏலாது" என்று ஒருவர்பேசப்புகுந்தால், "ஆராய்ச்சியின்றியே இதுவரையில் முன்னோர்களுங்கூட பகவத்வ்யதிரிக்தர்களையும் ஸ்ரீமான்களாக வ்யவஹரித்து வந்துவிட்டார்கள்; நிரூபண நிபுணர்கள் இனி அதைத் தவிர்க்க முயல்வதே தகுதி" என்றுசொல்லக்கூடிய மேதாவிகளும் பலர் ஏற்படுவர்.

"நான்முகனை நாராயணன் படைத்தான், நான்முகனும் தான் முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்" என்றுற்போன்ற அருளிச்செயல்களை பகவத்ஸந்நிதிகளில் ஸேவிப்பதில் பலர்க்கு உத்வேக முண்டாகின்றதென்று கண்டு அவற்றைத் தவிர்க்க வேணுமென்று சொல்லவும் சிலர் தலைப்படுவர்கள். ஆலயமென்பது அனைவர்க்கும் பொதுவாதலால் ஒருவருடைய மனமும் கன்றுதபடி நடந்துகொள்வது நலமல்லவா? என்று கொண்டு அதையும் சிலர் ஆமோதிப்பர்கள்.

ஆங்காங்கு ஸ்தலாசார்ய புருஷர்களென்று பலர்க்கு நடந்துவரும் பலவகை மரியாதைகளில் பலர் பொருமை கொள்வதனால் அவற்றையெல்லாம் நிறுத்திவிட்டால் அனைவர்க்கும் த்ருப்திபிறக்கும் என்கிற கிளர்ச்சியும் உண்டாகலாம். எம்பெருமான்களுக்குத் திருவாபரணம் முதலியன சாத்துவதிலும், உத்ஸவங்களை விசித்ரமாக நடத்துவதிலும் பலர்க்கு அருவருப்பு இருப்பதனால், இவையெல்லாம் தவிர்க்க வேணுமென்கிற கிளர்ச்சியுமுண்டாகலாம். கடைசியாகக் கோவில்களைப் பூட்டியே வைப்பது நலம் என்கிற தீர்மானமும் தோன்றலாம்.

யதிராஜஸப்ததியில் "ததந்யமததுர்மத ஜ்வலித சேதஸாம் வாதிநாம் சிரஸ்ஸு நிஹிதம் மயா பதமதக்ஷிணம் லக்ஷ்யதாம்" என்கிற சுலோகமொன்று உலகில் பலருடைய உள்ளத்தைத் துன்புறுத்துவதனால் அந்த திவ்யக்ரந்தத்திலிருந்து அதனையும் அதுபோன்ற மற்றும் சில ச்லோகங்களையும் விலக்கிவிடுவது நன்று— என்று நிரூபிக்கவல்ல நிபுணர்களும் தோன்றுவர்கள்.

உலகநன்மைக்காகச் சீர்திருத்தங்கள் செய்யப்படவேண்டுமென்கிற மேலான நோக்கத்தை நாமும் நன்கு ஆமோதிப்போம்; சாஸ்த்ரங்களுக்கும் சிஷ்டாசாரங்களுக்கும் இணங்காத விஷயங்களிலே அந்த நோக்கம் செல்லுவதுதான் அழகு. ஸப்ரதிபந்நங்களான ஸதாசாரங்களில் நம்முடைய குயுக்திகளால் வைபரீத்யம் விளைக்க எண்ணுவதும், இதனால் சில நன்மைகள் ஏற்படுமென்று எதிர்பார்ப்பதும் வைதிகமதாபிமாநிகளுக்கு உற்றதன்று. உலகில் மனிதராய்ப் பிறந்த யாவரும் திர்யக்குக்களைப் போலவும் மேல்நாட்டாரைப் போலவும் நவீந நாகரிகர்களைப் போலவும் நெற்றியில் ஒருவகையான சின்னமுமின்றி, நடையுடைகளையும் மாற்றிக் கொண்டு 'இவர் இன்னவகுப்பைச் சேர்ந்தவர்' என்று கண்டுபிடிக்கவும் முடியாதபடி வர்த்தித்தால் அளவுகடந்த ஐகமத்ய முண்டாகும்—என்று பேசுவார் பலரையும், அதனையும் ஆமோதிப்பார் பலரையும் எங்குங்காணுநின்றோமுக்கு எதிலும் வியப்பில்லை கிடீர்.

இப்போது திருமண்காப்பு விஷயமான கிளர்ச்சியைக் கிளப்பியுள்ள மஹான்கள் ஆங்காங்கு மூலவிக்ரஹங்களில் தொன்றுதொட்டே திருமண்காப்பு உண்டென்பதையும், இத்திருமண்காப்பை அழித்துவிடுவதனால் பொதுவாக உலகுக்கு ஒரு நன்மையும் செய்ததாகமாட்டாது என்பதையும் அறியாதவர்களல்லர். அறிந்

திருந்தும் இந்தக்கிளர்ச்சியைக் கிளப்பியிருப்பதன் உட்கருத்து யாதெனில்;—கேண்மின். திருமண்காப்பு ஸந்நிவேசத்தில் இரண்டுவகையான பேதம் ஏற்பட்டது எக்காலத்தில் என்கிற விசாரம் ஒருபுறமிருக்கட்டும். ஆழ்வார்களினுடைய மங்களாசாஸநம் பெற்று திவ்யதேசங்களாக வழங்கப்பட்டுவருகின்ற ஆலயங்களில் தென்கலைத் திருமண்காப்புப் பொருந்திய திவ்யதேசங்கள் எட்டுப்பங்காகவும், வடகலைத் திருமண்காப்புப் பொருந்திய திவ்யதேசங்கள் ஒரு பங்காகவும் இருக்கின்றமை அபலபிக்கமுடியாத விஷயம். "இன்ன வருஷத்தில் திருக்குடந்தை வடகலையாயிற்று; இன்ன வருஷத்தில் திருவயிந்திரபுரம் வடகலையாயிற்று; இன்ன வருஷத்தில் திருவெவ்வுளூர் வடகலையாயிற்று; இன்ன வருஷத்தில் தேவப்பெருமாள் ஸந்நிதி வடகலையாகத்தொடங்கிற்று" என்று உபயகலைகளிலும் சொல்லிக் கொண்டிருக்கின்ற மிகப்பெரியோர்களை நாளைக்கும் ஸேவித்துவருகிறோம். இவ்விஷயத்திற்கு ஆதாரங்களான சாஸநபத்திரங்களும் (Records) பலதிவ்யதேசங்களில் பெட்டிபெட்டியாக இன்னமும் காப்பாற்றப்பட்டுவருகின்றன. "இன்னஸந்நிதி இன்னகாலத்தில் தென்கலையாயிற்று" என்கிற வாசகத்தை இதுகாறும் இப்புவியில் ஒருவரும் கேட்டதில்லையென்பதை நாம் விசிஷ்ய எடுத்துரைக்கவேணுமோ? "உண்மையுரைப்போனை உலகம் பகைக்கும்" என்கிறபழமொழி நமது உள்ளத்தில் ஸ்திரமாக ஊன்றியிருப்பதால் இதைப்பற்றி இங்கு நாம் அதிகமாக எழுதவிரும்புகின்றிலோம். 'திருவெவ்வுளூர் முதலான திவ்யதேசங்கள் அநாதியாகவே வடகலை க்ஷேத்ரங்கள்தான்' என்றே கூறினும் கூறுக. பிராமாணிகர்களின் உள்ளம் உண்மையுணரும். அதைப்பற்றிச்சிறிதும் நாம் ப்ரதிவாதம்பண்ண வருவோமல்லோம். 'தென்கலை திவ்யதேசங்களே எட்டுப்பங்கு உள்ளன' என்னும் விஷயத்தை ஒருவரும் அபலாபம் செய்ய முடியாதென்பது புநருக்தம்.

சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதில் நாலைந்தும், தொண்டை நாட்டுத் திருப்பதிகள் இருபத்திரண்டில் இரண்டொன்றும், நடுநாட்டுத் திருப்பதிகளிரண்டில் ஒன்றும் நீங்கலாக, உள்ள திவ்யதேசங்களெல்லாம் தென்கலைத்திருமண்காப்பு பொலியுமவையே என்பது ப்ரத்யக்ஷஸித்தம். "எம்பெருமான்களுக்குத் திருமண்காப்பு அநுசிதந்தான்" என்று தேறிவிட்டால், சில திவ்யதேசங்களில் வந்தேறியான வடகலைத்திருமண்காப்பு அற்றுப்போனாலும் நூற்றுக்கணக்கான ஆலயங்களில் தென்கலைத் திருமண்காப்பு அற்றுப்போய்விடுமன்றோ! என்றுகொண்டு இந்தக் கிளர்ச்சியைக் கிளப்பியிருக்கின்றார்களென்பதை அறுதியிட நாம் அதிகம் சிரமப்படவேணுமோ? வைஷம்யம் ஒழியவேணும் என்று சொல்வது வெளியில். கருவில் ஊறிகிடப்பதோ............... "நீ அவல் கொண்டுவா, நான் உமி கொண்டுவருகிறேன்; இரண்டையும் கலந்து ஊதிப்புடைத்து இருவருமாய் உண்போம்" என்பது போன்ற வார்த்தைகளினால் உலகம் தளராதிருக்கவேணும். ஒரு ஸந்நிதியில் பெருமாளுடைய மூலவிக்ரஹமொன்றிலுள்ள ஒரு திருமண்காப்பு தவிர்ந்தாலும் மற்றும் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் ஒவ்வொரு ஸந்நிதியிலுமுள்ள திருமண்காப்புகளைத் தவிர்க்க என்ன வழி தேடுகிறார்களோ தெரியவேணும். திருக்குடந்தை ஸந்நிதியில் போட்டிருக்கிற நாமங்களை எண்ண முடியுமா? நிச்சேஷமாகத் தவிர்ந்தாலன்றோ [உண்மையில் இம்மஹான்கள் உலகநன்மையை நாடுபவர்கள் என்றே கொண்டாலும் அந்த] நன்மை ஸித்திக்கும்.

## அர்ச்சாவதாரத் திருமண்களுக்கு ப்ரமாண விமர்சம்

அர்ச்சாவதார ஊர்த்வபுண்ட்ரவிஷயமாக ஸச்சரித்ரரக்ஷையில் ஸ்ரீமந்நிகமாந்ததேசிகன் அருளிச்செய்திருக்கிற திவ்யஸூக்திகளை அடியேன் பலகால் எடுத்துக் காட்டியுள்ளேன். அவற்றையே வேதாந்த தீபிகையும் முன்வாக்கியங்களோடுங்கூட எடுத்துக்காட்டி அர்த்த விசாரமும் செய்திருக்கின்றது. அர்ச்சாவிக்ரஹங்களுக்கு தீபசிகாகாரமான ஊர்த்வபுண்ட்ரமே தேசிகனுடைய காலத்தில் இருந்து வந்ததென்றும் ஹரிபாதாகாரமாய் நாம் தரிப்பதுபோன்றபுண்ட்ரம் பிற்காலத்தில் தான் பகவத் விக்ரஹங்களிலும் வந்துபுகுந்ததென்றும் ஒருவாதம் தோன்றியுள்ளது இங்குக் கேண்மின்.

ஸந்நிதிகளில் மூலபேரம் உத்ஸவபேரம் என்ற இரண்டு திருக்கோலங்கள் ஆழ்வாராசார்யர்களின் அநுபவத்திற்கு விஷயபூதங்கள். உத்ஸவமூர்த்திகளில் தீபசிகாகாரமான திலகமே எங்கும் அநாதியாகவுள்ளதென்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். *கஸ்தூரீ கலிதோர்த்வபுண்ட்ர திலகம்* என்கிற பட்டர் ஸ்ரீஸூக்திப்படியுள்ள கஸ்தூரித்திருநாமமே தீபசிகாகாரமெனப்படுவதாம். அதனைத் திருவுள்ளம் பற்றியே ஸ்ரீதேசிகன் "தீபசிகாகாரோர்த்வபுண்ட்ரஸ்ய தர்சநாத்" என்று அருளிச்செய்தார். ஹரிபாதாகாரமான புண்ட்ரத்தை அணிந்து கொள்ளாமல் தீபசிகாகாரமான புண்ட்ரத்தையே அணிந்துகொள்ளும் இதரமதஸ்தர்கள் நாளைக்கும் இருந்து வருகிறார்கள். அவர்களே தேசிகன் காலத்தில் 'யச்சீலஸ் ஸ்வாமீ தச்சீலோ தாஸ:' என்கிற நியாயத்தை அவஷ்டம்பமாகக் கொண்டு ஆக்ஷேபம் செய்தவர்கள். அன்னவர்களைக் குறித்தே அங்குதேசிகன் அழகாக ஸமாதானம அருளிச் செய்து வருகிறார்.

"லோகே சைதத் ஏவம் த்ரஷ்டவ்யம்" என்கிற வாக்கியத்திற்குமேல் "நச தீப சிகாகாரமேவ" என்று தொடங்கியுள்ள ஸ்ரீஸூக்திகள் எதற்காக அவதரித்தன? என்பதை விமர்சிக்கவேணும். மூல விக்ரஹங்களில் தீபசிகாகாரமன்றிக்கே வேறு ஆகாரமான புண்ட்ரம் காண்கின்றமைபற்றியே அந்த ஸ்ரீஸூக்திகள் அருளிச்செய்யலாயின. அந்தபுண்ட்ரம் தீபசிகாகாரமுமன்று. ஹரிபாதாகாரமுமன்று. பின்னை என்ன ஆகாரமென்னில்; இன்னஆகாரமென்று நிர்ணயிக்க நாம் அநதிகாரிகள், ஏதோ அழகிய வடிவமாக எம்பெருமான்களின் திருநெற்றிகளில் காண்கிறது. அந்தத் திருமண்காப்பு அழகுக்காகவே ஏற்பட்டதாகக் கொள்ளத்தக்கது. அதில் எவ்விதமான விரோத சங்கையும் பண்ணத்தகாது—என்கிற இவ்வளவு கருத்தை ஸ்வாமி தேசிகன் அங்கு அந்த ஸ்ரீஸூக்திகளில் ஸ்பஷ்டமாக அமைத்தருளியிருக்கின்றார். "கிம் விநத்யதே" என்று தலைக்கட்டியிருக்கின்றார். மூலத்திருமேனிகளில் சாத்தியுள்ள திருமண்காப்பு நாம் அணியும் திருமண்காப்புபோலவே யிருப்பதனால் அது எங்ஙனே கூடும்? என்று விரோத சங்கை பண்ணினவர்களுக்கு இந்த ஸ்ரீஸூக்தி உத்தரமுரைக்கின்றது. இப்படியன்றி வேறுவகையான அர்த்தம் இங்குத்தோன்ற இடமிருப்பதாக ஸம்ஸ்க்ருத பாஷை பயின்றவர்கள் நினைக்க முடியாது. எல்லா அர்ச்சா மூர்த்திகளிலும் தீபசிகாகாரமான புண்ட்ரமேயிருந்து, வேறுவகையான புண்ட்ரம் இல்லா திருக்குமாகில் (நச) என்று தொடங்கியுள்ள தேசிக ஸ்ரீஸூக்திகளை அப்ரஸக்தங்களாகவும் பொருளற்றனவாகவுமன்றோ பாவிக்கநேரும்.

திருப்புளிங்குடியெம்பெருமானுடைய மூலமூர்த்தியில் காணப்படும் திருமண் காப்பு ஸந்நிவேசம் பிற்காலத்தில் வந்து புகுந்ததென்று ஒருவரும் சொல்ல இயலாது. 'அந்த திவ்ய தேசமே மிக நவீநம்' என்று ஒருகால் வாதிக்கப்புகுந்தால் புகலாம்; அங்ஙனம் வாதிக்கப்புகுமவர்கள் ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயத்திற்கு எவ்வளவு தூரத்தில் நிற்கவேணுமென்பதை நாம் சொல்லவேணுமோ? ஆழ்வார்திருநகரியைச் சேர்ந்த திருப்புளிங்குடி சயனமூர்த்தியை ஒவ்வொருவரும் ஸேவிக்கவேணும்.

## ஆழ்வான் ஸ்ரீஸூக்தி விமர்சம்

கூரத்தாழ்வானுடைய வரதராஜஸ்தவே *ஊர்த்வ புண்ட்ர திலகம் பஹுமாநாத் கிம் பிபர்ஷி வரத! ஸ்வலலாடே?* என்பது ஒரு ஸ்ரீஸூக்தி. பக்தர்களான எங்களுக்குத்தான ஊர்த்வபுண்ட்ரதாரணம் சாஸ்த்ரவிஹிதமாய்க்கிடக்கிறது; நித்ய நைமித்திகாதிகருமங்களுக்கு அங்கமாக ஊர்த்வபுண்ட்ரதாரணவிதியும் அகரணே ப்ரத்யவாயச்ருதியும் உள்ளனவாதலால் நாங்கள் அதனை அணிந்துகொள்ளுவது அவசியமாகும்; தேவரீர் அதனை எதற்காக அணிந்துகொள்ளுகிறது? என்கிற கேள்வியும் அதற்கு ஸமாதானமும் ரஸோக்தியாகத் தாமே அருளிச்செய்கிறார். 'பஹுமாநாத்' என்கிறசொல்லே ஸமாதானம். எங்ஙனே யென்னில்; அடியவர்கள் உகந்து அணிந்துகொள்ளும் திருமண்காப்பை நாமும் உகந்து அணிந்துகொள்ளவேணும் என்கிற திருவுள்ளமோ தேவரீருக்கு? என்பது சப்தார்த்தம்.

## பட்டர் ஸ்ரீஸூக்தி விமர்சம்

ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் உத்தரசதகத்தில்—"வடதளமதிசய்யரங்கதாமந்... வைஷ்ணவபோக்யலிப்ஸயா வா" என்றுள்ள ச்லோகரத்நத்தையும் இங்கு எடுத்துக்கொள்வோம். "பேதைக்குழவி பிடித்துச் சுவைத்துண்ணும் பாதக்கமலங்கள்" என்னுமாபோலே *பாலனாய்யேழுலகுண்டு பரிவின்றி ஆலிலை யன்ன வசஞ்செய்யும் அண்ணலும் தன்பாதத்தைச் சுவைத்துண்பதாகவுள்ளது. இது எதனாலே? என்ன, பட்டர் 'வைஷ்ணவபோக்யலிப்ஸயா' என்று ஸஹ்ருதயமநோஹாரியான ஒரு ஸமாதாநத்தைத் தோற்றுவிக்கிறார். 'நம்முடைய பாதாரவிந்தத்தை ஸ்ரீ வைஷ்ணவர்கள் *விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:* என்றோதிப் பரமபோக்யமாகக் கொள்ளுகையாலே, அவர்களுக்கு போக்யமானது நமக்கும் போக்யமாக இருக்க வேண்டுமாகையாலே, அந்த பாதாப்ஜத்தை நாமும் போக்யமாகக் கொள்வோம் என்று திருவுள்ளம் பற்றியே வடதளசாயி பகவான் தன்னுடைய பாதாரவிந்தத்தைத் தானே தனது திருப்பவளத்தில் இட்டு ருசி பார்க்கின்றான்போலும் என்று இங்கு ஸ்பஷ்டமாக அருளிச்செய்யப்பட்டிருக்கின்றது.

'தம்முடைய திருத்தகப்பனாரான கூரத்தாழ்வான் *பஹுமாநாத் கிம் பிபர்ஷி வரத ! ஸ்வலலாடே ?* என்றருளிச்செய்திருக்கும் திவ்ய ஸூக்தியிலிருந்தே பட்டருக்கு இவ்வகையான ரஸமயமான உல்லேகம் ஸ்புரித்தது' என்றும் பெரியோர் பகர்வதுண்டு. ஆழ்வான் "பஹுமாநாத் கிம்?" என்றாரேயல்லது 'பஹுமாநாத்ஏவ' என்றருளிச்செய்யவில்லையே! என்று ஆக்ஷேபிக்க நினைப்பர் சில அரஸிகர்கள்.

## திலகசப்தார்த்த விமர்சம்

இங்கே திலக சப்தார்த்தத்தைப்பற்றியும் சிறிது விமர்சிப்போம். திலத்தின் ஆகாரமாக இருப்பது திலகம்—அதாவது, எள்ளுப்போல் இருப்பது; என்று எண்ணக்கூடும். இப்படியாகில் (ஊர்த்வபுண்ட்ரதிலகம்) என்கிற சொல் உத்ஸவமூர்த்திகளில் காண்கின்ற ரீதியைச் சொல்லுவதேயன்றி மூலமூர்த்திகளில் நமக்குப்போலக் காண்கின்ற திருமண்காப்பைச் சொல்லகில்லாது என்று பிறர் நினைக்கக்கூடும்.

இங்கு உண்மையையுணர்த்துவோம்;—தைலம் என்கிற சொல் திலம் என்கிற சொல்
லிலிருந்து தத்திதாந்தமாகத் தேறினது; எள்ளிலிருந்து உண்டானது என்று பொருள்
படும். ஆனல், ஏரண்டதைலம், நாரிகேளதைலம் இத்யாதிகளான வ்யவஹாரங்கள்
எங்ஙனே பொருந்தும்? என்கிற சங்கை அனைவர்க்கும் உண்டாகக்கூடியதே. இதற்
குப்பரிஹாரம்எங்ஙனேயென்னில்;—ஸ்நேஹநே தைலச்' என்கிறவியாகரண வார்த்
திகம் பாணிநீயத்திலுள்ளது. இதனுல், தைலமென்பது ஸ்நேஹஸாமாந்யத்தைச்
சொல்லக்கடவதாக ஏற்படுகிறது. ஆகவே ஏரண்ட தைலம், இத்யாதி வ்யவஹாரங்
கள் நன்கு பொருந்திப்போகின்றன. திலகம் என்கிற சொல்லும் திலசப்தப்ரக்ருதிக
மன்றியே'நெற்றியலங்காரம்' என்றேபொருள்தரும். கோசகாரர்கள் இப்படித்தான்
நிர்வஹிக்கிருர்கள். ஆகவே, ஊர்த்வபுண்ட்ரதிலகம் என்பதில் 'திலத்தின் ஆகார
மானது' என்னும் பொருள் தோன்றச் சிறிதும் இடம் கிடையாது. ஆழ்வான்
*பஹுமாநாத் கிம் பிபர்ஷி* என்கிருரே; எள்வடிவமானதை அணிந்துகொள்வதில்
பஹுமாநோல்லேகம் பண்ண ப்ரஸக்தியில்லையன்ரே. ச்வேதம்ருத்திகையினுல்
சாத்தப்படுகிற திருமண்காப்பைப் பற்றியே ஆழ்வான் அருளிச்செய்தாரென்பது
திண்ணம்.

குருவாயூர்ப் பெருமாள் விஷயமான நாராயணீய ஸ்தோத்திரத்தில் "ஸ்நிக்த
ச்வேதோர்த்வபுண்ட்ராமபிச ஸுலலிதாம் பால பாலேந்து வீதீம்" என்றுள்ளது;
இங்ஙனே பலவுள்ளன. விரிப்பிற்பெருகும். மேலே காட்டிய ஆழ்வான் ஸ்ரீஸூக்தி
ஒன்றேபோதும்.

"சிரகாலத்து ஆசாரமாயிருந்தாலும் சாஸ்த்ரயுக்திகளுக்கு விரோதம் ஏற்
பட்டால் அது தெரியவந்ததும் முன்னதை மாற்றிக்கொள்ளவேண்டியதே" என்று
(வேதாந்த தீபிகையில்) எழுதியிருப்பது மிகவும் அழகு. அவிகீத சிஷ்டாசாரத்தின்
முன்னிலையில் சாஸ்த்ரம் பகல்விளக்கும்மின்மினியுமாகும். *உலகுக்கோர் முந்தைத்
தாய்தந்தையானபகவானுக்கு உலகிலுள்ளநாமெல்லாரும் மக்கள், ஸகலஸ்த்ரீகளும்
நமக்கு ஸஹோதரிகள்; ஆகவே எந்த ஸ்த்ரீயை நாம் மணம்புணர்ந்தாலும் ஸஹோ
தரியை மணம் புணர்ந்த பாதகமேயாகும். நெடுநாளாக ஆசாரம் வந்திருந்தாலும்
சாஸ்த்ரயுக்திகளை கவனித்தவுடனே யதிகளாய்விடவேண்டும். இனியுள்ள பிரம
சாரிகள் க்ருஹஸ்தர்களாக ஒருநாளும் ஆகக்கூடாது-என்றிப்படிப்பட்ட ஆராய்ச்சி
களும் பலபல அவதரிக்கும்போலும்.

அன்புமிக்க ஆரியர்களே! ஆக இவ்வளவும் இப்போதாக எழுதிய கட்டுரை
யன்று என்பதும், ஏறக்குறைய நாற்பது ஆண்டுகட்குமுன்னே வேதாந்த தீபிகை
யென்னும் பெயரால் வெளிவந்துகொண்டிருந்த அஹோபிலமடத்துப் பத்ரிகையில்
வெளிவந்த வொரு கட்டுரைக்கு ஸ்ரீஸ்வாமி (அப்போது) எழுதி வெளியிட்டிருந்த
விரிவான விடையின் ஏகதேச அநுவாதமென்பதும் மறக்கத்தக்கதன்று. ஒவ்வொரு
ஸமயத்தில் ஒவ்வொருவிதமான துர்வாதம் கிளம்பிக்கொண்டே வருகின்றது. இக்
கட்டுரையின் தலைமேல் நாம் ப்ரஸ்தாவித்த ஆஸ்திக நாஸ்திகர் ஏதாவது ஒரு ப்ரமா
ணத்திற்காவது கட்டுப்படுபவரா யிருந்தால் இவர்க்கு நாம் பிரமாணங்களைக் காட்டி
"இதற்கு என்ன சொல்லுகிறீர்? இதற்கு என்ன சொல்லுகிறீர்?" என்று மடி
பிடித்துக் கேட்கலாம். தைத்திரீயோபநிஷத்தில் "அத யதி தே கர்மவிசிகித்ஸா வா

வ்ருத்த விசிகித்ஸா வா ஸ்யாத்; யே தத்ர ப்ராஹ்மணாஸ் ஸம்மர்சிந:, யுக்தா ஆயுக்தா:, அலூக்ஷா தர்மகாமாஸ் ஸ்யு:, யதா தே தத்ர வர்த்தேரந்...........ஏஷ ஆதேச:, ஏஷ உபதேச:''... என்று செவிக்கினிதாக ஓதியிருப்பது இந்த ஆஸ்திக நாஸ்திகர் காதில் ஒருநாளும் விழவில்லையா? ப்ருஹத்ப்ரஹ்ம ஸம்ஹிதை யொன்று பார்த்தால் போதுமே. எந்த ஸம்ஹிதையும் வேண்டா. தேசிகனுடைய ஸச்சரித்ர ரக்ஷையொன்றுபோதுமே. ஆசாரியர்களிட்டருளினவேலியைக் களைந்தெடுத்தெறிய்ப்பிறந்தார்போலுமிவர். சோசநீயரானவிவர் நிரஸநீயரேயல்லரென்று நிற்போம்.

## அரிய பெரிய விருந்தொன்று

நாளது ஆவணிமீ 24௨ (9—9—74) ஸ்ரீ க்ருஷ்ண ஜயந்தி யல்லவா?, புனிதமான அந்த நன்னாளை நமது அன்பர்களனைவரும் ஸ்ரீ க்ருஷ்ண திவ்ய சேஷ்டிதாநுபவத்தினால் இனிதுகழிக்கவேணும் என்று திருவுள்ளம்பற்றிய ஸ்ரீஸ்வாமி (P.B A.) ''ஸ்ரீ க்ருஷ்ணதிவ்யசேஷ்டிதங்கள்'' என்கிற நூலைஉபகரித்திருக்கின்றார். ஆழ்வார்களின் திவ்யப்பிரபந்தங்களில் சிறியனவும்பெரியனவுமாக ஸ்ரீக்ருஷ்ணதிவ்யசேஷ்டிதங்கள் எவ்வளவு அநுபவிக்கப்பட்டிருக்கின்றனவோ அவ்வளவும் இதில் ஸ்ரீபாகவத ஹரிவம்சாதிகளைக் கொண்டு விளக்கமாக எழுதப்பட்டுள்ளன. கூரத்தாழ்வானும் பட்டரும் தம்தம் ஸ்தவங்களிலும், பிள்ளைப்பெருமாளையங்கார் தமது பிரபந்தத்திலும் அநுபவித்த (ஸ்ரீ க்ருஷ்ண சேஷ்டித) வகைகளும் அநுபந்தத்தில் வரையப்பட்டுள்ளன. இந்நூல் ஸ்ரீராமாநுஜன் அநுபந்தமாகவெளியிடப்படுகின்றது. இது,இவ்வருஷத்துச் சந்தாசெலுத்தினவர்களுக்கும் ஜீவியச்சந்தாதாரர்களுக்கும் 7-9-74ல் அனுப்பப்படும். தனிப்பிரதி வேண்டியவர்கள் 75 N.P. ஸ்டாம்பு அனுப்பிப் பெறலாம்.

இங்ஙனம், ***மானேஜர்***, க்ரந்தமாலா ஆபீஸ்.

## அன்பர்களுக்கு அறிவிப்பு

313 லக்கங்கொண்ட இந்த ஸ்ரீராமாநுஜனிதழ் இருபத்தேழாவது ஸம்புடத்தின் ஆரம்ப ஸஞ்சிகை ***யாகும். அதாவது*** இவ்வருஷத்தின் முதல் ஸஞ்சிகை இதுவேயென்றபடி. சந்தாதாரர்கள் 313 முதல் 324ஆம் ஸஞ்சிகை வரையில் வருஷக் கணக்கு வைத்துக்கொள்ள வேண்டியது. இவ்வருஷத்துச் சந்தாவை இது வரை அனுப்பாதவர்கள் விரைவில் அனுப்பவேண்டியது.

இப்படிக்கு,

**மானேஜர்**—ஸ்ரீ ராமாநுஜன் கார்யாலயம்.

## ஸ்ரீமான் வெங்கடக்ருஷ்ணனுடைய பேருதவி

திருவல்லிக்கேணியில் வாழும் ஸ்ரீமான் சிரஞ்சீவி *M. A.* **வெங்கடக்ருஷ்ணன்** (மஹாமேதாவி யென்று எம்மால் விருது சாத்தப்பெற்றவன்) ஒரு பேருதவி புரிந்தது ஸ்ரீவைஷ்ணவவுலகம் மெச்சத்தகுந்தது. நமது ஸ்ரீராமாநுஜன் தோன்றத் தொடங்கி இருபத்தாறு ஆண்டுகள் பூர்த்தியாகி இருபத்தேழாமாண்டு பிறந்திருக்கின்றது. இதுகாறும் 312 ஸஞ்சிகைகள் வெளிவந்துள்ளன. இச்சஞ்சிகைகளில் பத்ராதிப வியாஸங்களாக மட்டும் 1089 வியாஸங்கள் வெளிவந்துள்ளன. அந்த வியாஸங்களையெல்லாம் அகராதிவரிசைப்படுத்தி நேர்நேராக ஸஞ்சிகையின் லக்கத்தையும் குறிப்பிட்டு ஒரு ஜாபிதா ஸித்தப்படுத்தி சென்ற ஆவணி மாதத்தில் நமக்கு அனுப்பியிருந்தான். அதை அப்போது நாம் கவனிக்காமலிருந்துவிட்டோம். ஸமீப காலத்தில்தான் அதை நாம் கவனிக்க நேர்ந்தது. இந்த அட்டவணை உலகுக்கு மிக்கவுதவிபுரியக் கூடியதென்று தோன்றினபடியால் இதனை உடனே அச்சிட்டு வெளியிடச் செய்தோம். சென்ற ஆவணி மாதத்திற்குப் பிறகு வெளிவந்த 300 to 312 ஸஞ்சிகைகளில் வெளிவந்துள்ள கட்டுரைகளுக்கும் அகராதி யட்டவணையை முடிவில் சேர்த்திருக்கிறோம். ஸ்ரீராமாநுஜன் ஸஞ்சிகைகளை ஆதிமுதல் இதுவரையில் சேமித்துவைததுக்கொண்டிருப்பவர்களுக்கு இவ்வட்டவணைமிகப்பயன்படும். (P.B.A)

ஜகதாசார்ய ஸிம்ஹாஸனாதிபதி மஹாமஹிமோபாத்யாய
**ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்**
10—9—48ல் தொடங்கி இருபத்தைந்து ஆண்டுகளாக நடத்திவரும்

# ஸ்ரீ ராமாநுஜனில் 1 முதல் 300 வரை லக்கமுள்ள ஸஞ்சிகைகளில் வெளிவந்துள்ள வ்யாஸங்களுக்கு அட்டவணை

(லக்கம்-ஸஞ்சிகையின் லக்கம்)

ஸ்ரீ ராமாநுஜன் 300 முதல் 312 வரை வெளிவந்தகட்டுரைகட்கு அட்டவணை.

அண்ணஸ்வாமி யுபந்யாஸமாலை—1, 2 இதழ்களில் வெளிவந்தவை

# எனது இரவு நினைவுகள்

சென்றமாதத்து ஸ்ரீராமாநுஜனில் மாப்பிள்ளைக் கதைகள் இரண்டு கண்டீர்கள். மூன்றுவது கதையும் கேண்மின். வைதிகவேஷத்தோடு கூடியவொரு மாப்பிள்ளை மாமனார் திருமாளிகைக்குச் சென்றார். மாலை 6 மணிக்கு மாமியார் தீர்த்த பாத்திரத்தைக் கொண்டு வைத்து 'மாப்பிள்ளே! ஸந்த்யாவந்தன வேளையாயிற்றே. ஸந்த்யாவந்தனம் பண்ணும்' என்றாள். 'நான் அப்பவே ஸந்த்யாவந்தனம் பண்ணியாயிற்று' என்றார் மாப்பிள்ளை. 'எங்கே பண்ணினீர்?' என்று கேட்டாள் மாமி. 'தெருக்கோடியிலுள்ள குளத்தில் பண்ணினேன்' என்றார் மாப்பிள்ளை. அது கேட்ட மாமி 'ஐயோ! அந்த குளத்தில் ஆறு மாதமாகத் தண்ணி வற்றிக்கிடக்கிறதே, எல்லாரும் நெல்லு உலர்த்துகிறார்களே அதில், நான் கூட நித்தியம் அதில்தானே நெல்லு உலர்த்திவருகிறேன்' என்றாள். அதற்கு மாப்பிள்ளை சொல்லுகிறார்-'அதென்னமோ எனக்குத்தெரியாது, அந்தக் குளத்தில் ஜலமிருக்கிறது என்று சொன்னார்கள், அதில் பண்ணிவிட்டேன்' என்று. மாமி மேலும் கேட்கிறாள்—'மாப்பிள்ளே! நீர் நேரில் கண்ணால் பார்த்த ஜலத்தில் பண்ணினீரா? காதால் கேள்விப்பட்ட ஜலத்தில் பண்ணினீரா?' என்று. அதற்கு மாப்பிள்ளை சொல்லுகிறார்—'மாமீ! நான் தான் சொன்னேனே தெருக்கோடிகுளத்தில் ஜலமிருக்கிறதென்று சொன்னார்களென்று; அதில்தான் பண்ணினேன். தொண தொணவென்று கேட்கிறீரே. எனக்குச் சொன்னவர் ஒருகாலும் பொய் சொல்லுகிறவரன்று. அவர் சொன்னதை நம்பி நான் பண்ணிவிட்டேன்' என்று. மாமி மேலும் விடாமல் சொல்லுகிறாள் 'நான் காலை 9 மணிக்கு அங்கே உலர்த்தின நெல்லை மாலை 5 மணிக்கு வாரி எடுத்துக்கொண்டு வந்திருக்கிறேன், அப்போது ஜலமில்லையே!' என்று. அதன்மேல் 'மாமீ! நீர் நெல்லை வாரிக்கொண்டு வந்தபின்பு மழை பெய்திருக்கக்கூடாதா என்ன?' என்று மாப்பிள்ளை சொல்லுகிறார். கதை இவ்வளவோடு நிற்கலாமே. ... ... ... ... ...

## (2)

## ஸ்ரீமத் இஞ்சிமேட்டு ஸ்வாமியோடு ஸம்பாஷணை

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. இஞ்சிமேட்டழகியசிங்கர் பூர்வாச்ரமத்தில் (ரங்கநாதாசாரியர் ஸ்வாமியாக இருந்தகாலத்தில்) அடியேனுடைய குடிலருகே வாழ்ந்துவந்தபடியால் தினப்படியாக வெள்ளக்குளத்திற் கெழுந்தருளும்போது பெரும்பாலும் ஸந்திக்கவும் ஸம்பாஷிக்கவும் நேருமென்று பலகால் எழுதியிருக்கிறேன். ஒருநாள் பின்மாலை வெள்ளக்குளப் பயணத்தில் ஸ்வாமி புன்முறுவலுடனே ஒரு கேள்விகேட்டருளினார்—'நம்மாழ்வார் திருவவதரித்தது முதல் லோகவ்ருத்தாந்த மறிவதற்கு ப்ரஸக்திலேசமுமில்லாமல் திருப்புளியடியிலேயே வளர்ந்தவராச்சே, *ஒரு நாயகமாய் பதிகத்திலும்* கொண்ட பெண்டிர் பதிகத்திலும் ஸாதிப்பதைப் பார்த்தால் லோகாநுபவம் விசேஷமாகவுள்ளவர்போல் காண்கிறதே, இது எப்படி?' என்று. அப்போது அடியேன் விஜ்ஞாபித்தேன்—"ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் (1-20-19) ப்ரஹ்லாதாழ்வான் நரஸிம்ஹமூர்த்தியிடம் வரம் வேண்டுகையில் *யா ப்ரீதி: அவிவேகாநாம் ஹ்ருதயேஷு அநபாயிநீ, த்வாமநுஸ்மரதஸ் ஸா

மே ஹ்ருதயாத் மாபஸர்ப்பது' என்கிறான். அவிவேகிகளான ஸம்ஸாரிகளுக்கு விஷயாந்தரங்களிலே எப்படிப்பட்ட அன்பு உண்டாகின்றதோ, அப்படிப்பட்ட அன்பு எனக்கு உன்பக்கலில் உண்டாகவேணும் என்பது இதன் பொருள். நாலைந்து பிராயம் நிரம்பாத இந்தச் சிறுவனுக்கு—விஷயாந்தரங்களிலே ஸம்ஸாரிகளுக்கு உண்டாகும் அன்பின்திறம் எப்படித் தெரிந்தது? என்று அடியேனுக்கு நெடுநாளாக சங்கையுள்ளது என்றேன். மந்தஹாஸத்துடனே 'ஸமாஹிதனானேன்' என்றருளிச் செய்தார்.

## ( 3 )

அடியேன் வித்யார்த்தி தசையில், அரசாணிபாலை வேங்கடாத்வரி இயற்றிய விச்வகுணாதர்ச சம்புவைப் பாடம் வாசித்துக்கொண்டிருக்கிறேன். மாத்வ பண்டிதரான வித்யாதீசாசார் என்கிற உபாத்யாயர் பாடப்ரவசனம் செய்கிறார், அதில், காஞ்சீபுரியிலுள்ள உலகளந்த பெருமாள் ஸன்னிதி வர்ணனம் நிகழ்கிறது. "ரவி க்ரமாசுத்வநிஷேதிகோபுரம் த்ரிவிக்ரமஸ்யாயதநம் நிசாம்யதாம்" என்பது ஒரு ச்லோகம். ஆகாசத்தில் ஸூர்யன் கனவேகமாக ஓடிக்கொண்டிருக்கையில் அந்த ஓட்டத்தைத் தடுத்து விட்டதாம் அந்த ஸன்னிதியின் கோபுரம். கவிகள் அதிசயோக்தியையே ஜீவாதுவாகக் கொண்டவர்களாதலால் "ஸூர்ய மண்டலத்தை அளாவியுள்ளது அந்தகோபுரம்" என்று சொல்லவேண்டி இங்ஙனே வருணித்தபடி —என்று கூறினார் உபாத்யாயர். ஸஹபாடிகளில் ஒருவர் "இரண்டு மூன்று நிலைகளையே யுடையதான ஒருசிறு கோபுரத்தையா இப்படி வருணிப்பது?" என்றார். அதற்கு அந்த உபாத்யாயர் கூறினார்; "அந்த உலகளந்த பெருமாள் ஸன்னிதியின் ஸமீபத்தில் பச்சைவண்ணர் ஸன்னிதியுள்ளது; அதற்கு கோபுரமே கிடையாது. "ரவிக்ரமாசுத்வநிஷேதி கோபுரம்" என்கிற வர்ணனையை அந்த ஸன்னிதி விஷயத்தில் செய்யாமல் சிறிய கோபுரமாவது உள்ளதொரு கோவிலுக்கு இந்த விசேஷணமிட்டது விசேஷந்தானே" என்று.

இந்த ப்ரஸங்கத்தில், அருகேயிருந்த மற்றொருபாத்யாயர் (ஸ்ரீவைஷ்ணவர்) ஸாதித்த வார்த்தை—" காஞ்சீபுரியைப் பாடின திருமங்கையாழ்வார் *கல்லுயர்ந்த நெடுமதிள் சூழ் கச்சி' என்று பாடியுள்ளார். தேவப்பெருமாள் ஸன்னிதியைச் சுற்றி இப்போது விளங்குகிற கல்லுயர்ந்த நெடுமதிள் என்னும்படியான ப்ராகாரமானது ஐந்நூறு வருடங்களுக்குள்ளாக (ஓர் அரசன் திருப்பணியாக) அமைந்ததென்கிறார்கள்; திருமங்கையாழ்வார் பாடினபடியாலே "வாசம் அர்த்தோநுதாவதி" என்கிற முறையிலே ஆழ்வாருடைய திருவாக்கு பலித்தபடி" என்று. உண்மையேயிது. மஹான்களின் திருவாக்குக்கு மதிப்பு உள்ளதேயாம்.

திருவெள்ளியங்குடி யென்னுந் திருப்பதியை மங்களாசாஸனம் செய்தருளாநின்ற திருமங்கையாழ்வார் "படியிடை மாடத்தடியிடைத் தூணில் பதித்த பன்மணிகளினொளியால், விடிபகலிரவென்றறிவரிதாய திருவெள்ளியங்குடியதுவே" என்றருளிச் செய்கிறார். இந்த வருணனையும் நாளடைவில் பலித்தே தீரும்.

# அபூர்வார்த்த ரத்ந நிதி

## 155. புடைக்கலந்தானை யெம்மானை

திருவிருத்தத்தில் (86) *அடைக்கலத்தோங்கு கமலத்தென்னும் பாசுரத்தின் பிற்பகுதியில் "வெண்ணெய்க்கன்று ஆய்ச்சி வன்தாம்புகளால் புடைக்கலந்தானை யெம்மானை" என்றுள்ளது. இங்கு பட்டர் திருவுள்ளம்பற்றிய பாடத்தின் சுவை மிக்க பொருளைக் கேளீர். உள்ள பாடத்தின் பொருளை முன்னம் விவரிப்போம்.

அன்று ஆய்ச்சி வன்தாம்புகளால் புடைக்க அலந்தானை=வெண்ணெய் திருடின குற்றத்திற்காக யசோதைப்பிராட்டி உரலோடு பிணைத்துத் தாம்பினால் கட்டியடிக்க வருந்தியிருந்தவனை என்றபடி; வருந்தி நின்றது அடிப்பதனாலுண்டான துன்பம் பொறுக்கமாட்டாமையாலன்று; திருவாய்ப்பாடி யெங்கும் துருதுருக்கை யாய்த் திரிந்து பெண்களையும் தயிர் பால் நெய் வெண்ணெய் முதலியவற்றையும் கொள்ளைகொள்ளப்பெருதபடி இங்ஙனேகட்டிப்போட்டு வைத்திருக்கின்றாளேயென வருந்தியவாறு. பெரிய திருவிழாக்களில் கள்ளப்பயல்களை அரசாங்கச் சேவகர்கள் சிறைப்படுத்திவைத்தால், 'வேண்டினபடி திரிந்து களவு முதலியன செய்யப்பெருமே நம்மையிப்படி சிறைப்படுத்தி வைப்பதே!' என்று அப்பசல்கள் வருந்துவது போல.

பட்டர் திருக்கோட்டியூரி லெழுந்தருளியிருக்கும்போது ஒரு ஸ்வாமி வந்து 'அடியேனுக்கு ஒருரு திருவிருத்தம் பொருளருளிச் செயயவேணும்' என்று பிரார்த்திக்க, 'நம்பெருமாளைப் பிரிந்த துயரத்தினால் எனக்கொன்றும் சொல்லப் போகிற தில்லை; நஞ்சீயர்பக்கலிலே கேட்டுக்கொள்ளும்' என்று சொல்லி, நஞ்சீயர்க்கு நிய மிக்க, ஜீயரும் பொருளருளிச் செய்து வருகையில் இப்பாட்டளவிலே வந்தவாறே **"புடைக்க அலந்தானை"** என்கிற பாடப்படியே (நஞ்சீயர்) பொருளுரைக்க, பட்டர் அது கேட்டு "ஜீயா! 'அலந்தானை' என்றபாடத்திற்காட்டிலும 'அலர்ந்தானை' என்ற பாடம் ஆழ்வார்திருவுள்ளத்திற்கு மிகப் பொருந்தும் போலே இன்று தோன்றுகின்றது" என்றருளிச்செய்தாராம். ஆய்ச்சி அடிக்க அடிக்க முகமலர்ந்தானும் கண்ண பிரான். (இதனை விவரிப்போம்.) கண்ணபிரான், வெண்ணெய் களவு செய்கிற தன்னை யசோதைப்பிராட்டி அடிக்கடி தாம்பினால் கட்டி வருத்துகின்றாளென்று வீட்டிலுள்ள கயிறுகளைத் துண்டு துண்டாக அறுத்து வைத்திடுவான்; அவற்றை அவள் ஒன்றோடொன்று முடிபோட்டு ஒரு கயிறுவடிவமாக்கி அதுகொண்டு கண்ண பிரானைக் கட்டுவள்; அப்படி கட்டும்போது தன் உடம்புக்கு எட்டம் போராதபடி யான அக்கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்ட முடியாதபடி எளிதில் தன்னைத் தப்புவித்துக்கொள்ள வல்லவனாயினும், தனது ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஆச்ரித பாரதந்திரியம் முதலிய சீலங்களை வெளியிடுவதற்கென்றே பரத்வநிலையைத் தவிர்ந்து மநுஷ்ய ஸஜாதீயனாக அவதரித்திருக்கிற தான் உரலோடு கட்டுண்டு அடியுண்டிருக்கை முதலான இவ்வகைகளால்தான் அக் குணங்களை விளங்கச் செய்துகொள்ள வேணுமென்று கொண்டு, ஒரு சுற்றுக்குப் போராததாம்பு இரண்டு மூன்று சுற்றுக்குப் போரும்படி உடம்பைச் சுருக்கி அமைத்துக்கொண்டு **'கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயன்'** என்னும்படி ஆவன். 'இங்ஙனே நம்முடைய ஸௌசீல்ய ஸௌலப்ய குணங்கள் விளங்கப் பெற்றோமே;

அவதார ப்ரயோஜநம் நன்கு நிறைவேறப் பெற்றதன்றே' என்று முகமலர்ச்சியடைந்திடுவன் என்க. திருப்பாவையில 'குத்துவிளக்கெரிய வென்னும பாட்டில் நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர் மார்பா' என்றவிடத்து ஆருயிரப்படி வியாக்கியானத்தில் "யசோதைப்பிராட்டி கட்டுக்கு அலருகிற மார்பு இவளுடைய ஸ்தநபந்தத்துக்கு அலரச்சொல்லவேணுமோ" என்றருளிச்செய்து அதற்கு உபவாத ப்ரமாணமாக இந்தத் திருவ்ருத்தப் பாசுரத்தை எடுத்துக்காட்டியுள்ளார். அங்குப் 'புடைக்கலந்தானை' என்றிருக்கவேண்டுவது 'அலந்தானை' என்றே பல பதிப்புகளிலும் (நமது பதிப்பிலுங்கூட) விழுந்திருப்பது அச்சுப்பிழை. 'அலந்தானை' என்கிற பாடம் அவ்விடத்து உபவாத ப்ரமாணமாவதற்குப் பொருத்தமில்லை.

## 156. பூமகளன்பன்

தமிழில் 'இரட்டுற மொழிதல்' என்றொருவகையுண்டு. இரண்டு பொருள் தோன்றுமாறு ஒரு சொல்லைச் சொல்லுதல். [சிலேடையில் பல பொருள்களும் தோன்றுவதுண்டு; அது அணிகளில் ஒன்று. அதுவன்றிது.] விவரிக்கக் கேண்மின். எம்பெருமான் திருமடந்தை மண்மடந்தையெனும் ஸ்ரீதேவி பூதேவிகளிருவர்க்கும் கொழுநன் என்று சொல்ல விரும்பி ஒருவர் 'பூமகளன்பன்' என்றார். இங்குப் பூமகள் என்பது பெரிய பிராட்டியாரையுஞ் சொல்லும், பூமிப்பிராட்டியாரையுஞ் சொல்லும். எங்ஙனே யென்னில்; பூவிலே பிறந்தமகள்—தாமரைப்பூவிலே தோன்றியவள் என்று கொண்டு ஸ்ரீ மஹாலக்ஷ்மியாகிய பெரிய பிராட்டியாரைச் சொல்லிற்றாகக் கொள்ளப்படும். வடமொழியில் பவர்க்க சதுர்த்தமான பூவென்னுஞ் சொல் பூமிக்கு வாசகமாகையாலே, இங்குப் பூவென்பதை வடசொல் விகாரமாகக் கொண்டால் பூமிப்பிராட்டி யென்று பொருள்படும். திருமழிசைப்பிரான் திருச்சந்த விருத்தம் தொடங்கும்போது "பூநிலாயவைந்துமாய்" என்றார். இங்குப் பூவென்றது பூமியைச் சொல்லுமதேயொழிய, புஷ்பத்தைச் சொல்லுமதன்று. திருவரங்கத்தமுதனார் இராமாநுச நூற்றந்தாதி தொடங்குகையில் *பூமன்னுமாது பொருந்திய மார்பன்* என்றார். இங்குப் பூவென்னுஞ்சொல் புஷ்பத்தையே உணர்த்துவதாகும். ஆகவே பூவென்னுஞ் சொல்லுக்கு இருவகைப் பொருள்களும் ப்ரஸித்தமேயென்க.

## 157. பெண்ணைத்தென்பால்

பெரியதிருமொழியில் திருக்கோவலூர்ப் பதிகத்தில் "துஞ்சாநீர்வளஞ் சுரக்கும் பெண்ணைத் தென்பால்...திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே" என்பது முதற்பாசுரம். பெண்ணையாற்றின் தென்புறத்தில் திருக்கோவலூர் உள்ளது. பிநாகிநீ என்னும் வடசொல் பெண்ணை யெனத் திரிந்துள்ளது. இந்த நதி தென்னாட்டிற்போல வடநாட்டிலும் பெருகுகின்றது. நெல்லூரில் ரங்கநாயகன் ஸந்நிதி வாசலில் பெருகுவதைப் பார்க்கின்றோம். அவ்விடத்திலுள்ளார் அந்த நதியைப் பிநாகிநி யென்றே வழங்கிவருகின்றார்கள். இந்த நதியை வடமொழி நூல்களில் பிரயோகிக்கவேணுமானால் பிநாகிநி யென்றுதான் பிரயோகிக்கவேணும். நாராயணனென்பதற்கு நாரணனென்கிற பிரயோகம் தமிழில் கண்டாலும் வடநூலார் நாரண: என்று பிரயோகிப்பதில்லை; நாராயண: என்றே பிரயோகிக்கின்றனர். காவேரியைக் காவிரி யென்றே தமிழர் பிரயோகித்தாலும் வடநூற் பிரயோ

கம் காவேரீ என்பதேயாம். காவேரிக்குப் பொன்னி யென்றும் ஒரு திருநாம முள்ளது. அது வடநூலில் 'கநகாபகா—கநகஸரித்—ஹேமாபகா' என்றிப்படி மொழி பெயர்க்கப்படுகின்றதேயன்றிப் பொன்னிநதீ என்னப்படுவதில்லை. பெண்ணையாற்றுக்கு இயற்கையான ஸம்ஸ்க்ருத நாமதேயம் பிநாகிநீ யென்றிருக்குப்போது அதை விட்டிட்டுத் தமிழ்நாமத்தை வடநூலில் பிரயோகிப்பதற்கு ஔசித்யலேசமுமில்லை. ஸ்ரீ தேசிகனுடைய தேஹளீச ஸ்துதியில் (4, 7 ச்லோகங்களில்) "பண்ணு" என்று காணப்படுவது பாடப்பிறழ்வேயாம். 'புண்யா' என்று பெண்ணையை மாற்றினர் ஸ்வாமி. அந்த தேஹளீச ஸ்துதியிலேயே மேலே பதின் மூன்றாம ச்லோகத்தில் "புண்யா பூர்வ புரசாஸநமௌலிமாலா" என்று ஸ்பஷ்டமாக ஸாதித்திருப்பது கொண்டு இதனை அறுதியிடலாம் "ஆவீறு ஐயும்" என்கிற நன்னூல் விதிப்படி ஆகாராந்தமான வடசொல்லானது தமிழில் ஐகார வீற்றதாக ஆகுமேயல்லது தமிழில் ஐகாரவீற்றதான சொல்லை வடமொழியில் ஆகாராந்தமாக்கிப் பிரயோகிப்பதை எங்குங் கண்டதில்லை. கங்கா, யமுநா, பூதநா இக்யாதி வடசொற்களைத் தமிழில் கங்கை, யமுனை, பூதனை யென்று ஐகாரவீற்றதாக்கிப் பிரயோகிப்பதுண்டேயல்லது, தங்கை, மங்கை, நங்கை என்பது முதலான தமிழ்ச் சொற்களை வடமொழியில் தங்கா மங்கா நங்கா என்று ஆகாரவீற்றதாக்கிப் பிரயோகிப்பதில்லை. மேலும் பெண்ணை யென்று சொல்வடிவமேயன்றிப் பண்ணை யென்றில்லை. வடமொழியில் குறிலான எகரம் கிடையாதாதலால் 'பேண்ணா' என்றால் ஒருவாறு ஒக்கும். அதுவும் நூல்வரம்பைக் கடந்ததேயாகும். 'புண்யா' என்பதே ஸ்வாமி திருவாக்கில் வெளிவந்த பாடம். ... ... ...

## 158. பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும் பேற்றுக்கு த்வரிக்கையும்

பிள்ளை லோகாசாரியர் முமுக்ஷுப்படி த்வயப்ரகரணம் தொடங்கும்போது வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதங்களாகப் பத்து விஷயங்கள் அருளிச்செய்கிறார். "புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விடுகையும் எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும்" என்றருளிச் செய்தவுடன் "பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும் பேற்றுக்கு த்வரிக்கையும்" என்று அருளிச்செய்கிறார். பேறு தப்பாதென்று துணிந்திருக்கையாவது பேறு கனத்திருப்பதையும் அதற்குரிய உபாயம் நம் பக்கலில் இல்லாமையையும் நாம் செய்யும் பாபங்கள் அளவுகடந்திருப்பதையும் நோக்கித்தளும்பாமல் நமக்குப்பலன்தப்பாமல் கைபுகும் என்று விச்வஸித்திருக்கை. பேற்றுக்கு த்வரிக்கையாவது இப்படி விச்வஸித்து, 'பேறு ஸித்திக்கிறபோது காண்கிறோம்' என்று ஆறியிராமல் 'தாவி வையங்கொண்ட தடந்தாமரை கட்கே கூவிக்கொள்ளுங்கால மின்னங் குறுகாதோ' 'மாகவைகுந்தங் காண்பதற்கு என் மனமேகமெண்ணும்' என்கிறபடியே க்ரம ப்ராப்தி பற்றாமல் பதறுகை. ஒரு வ்யக்தியிடத்திலே இவ்விரண்டும் கூடுவது கடினமானது. அருளிச்செயலில் இவ்விரண்டு நிலைகளையும் காட்டுவதற்கு ஒரு வழி காண்கிறோம். திருவாய்மொழியிலும் பெரிய திருமொழியிலும் தாய் பாசுரமென்றும் மகள் பாசுரமென்றும் காண்கிற பதிகங்களில் தாய்பாசுரங்களில் பேறு தப்பாதென்று துணிந்திருக்கை யாகிற

அத்யவஸாயம் புலப்படும். மகள் பாசுரங்களில் பேற்றுக்கு த்வரிக்கையாகிற பதற்றம் காணப்படும். "ஸம்பந்தோபாய பலங்களில் உணர்த்தி துணிவு பதற்றமாகிற ப்ரஜ்ஞாவஸ்தைகளுக்குத் தோழி தாயார் மகளென்று பேர்" என்கிற ஆசார்ய ஹ்ருதய சூர்ணையின் வ்யாக்யானம் கண்டு தெளிக. ... ...

## 159. பைந்நாகம் பாய்சுருட்டி

ஸ்ரீகாஞ்சியில் திருவெஃகா என்கிற யதோக்தகாரியெம்பெருமான் ஸன்னிதியில் ஆண்டுதோறும் தையில் மகத்தன்று நடைபெறும் ஒரு மஹோத்ஸவத்திற்குப் பைந்நாகம் பாய் சுருட்டி என்று பெயர். இது ஐதிஹ்யோத்ஸவம் எனப்படும். ஐதிஹ்யமாவது திருமழிசைப்பிரான் தமது சிஷ்யரான கணிகண்ணன் என்பவருடன் காஞ்சீபுரத்தில் எழுந்தருளியிருந்த காலத்து அந்நகரிலிருந்த வயது முதிர்ந்த கிழவியொருத்தி அவருடைய அருளால் மாறாத யௌவனம் பெற்றாள். அவளை மணந்த அந்நகரத்தரசன் தானும் நித்ய யௌவனனாக விரும்பி, கணிகண்ணனைப் புருஷகாரமாக அநுவர்த்தித்தால ஆழ்வாரருளால் மநோரதம் கைகூடும் என்றுணர்ந்து மறுநாள் கணிகண்ணன் வந்தபோது தன் விருப்பத்தைத் தெரிவித்து "உமது ஆசிரியரை நான் ஸேவிக்கும்படி இங்கு அழைத்து வரவேண்டும்; என்னையும் நித்ய யௌவனனாக ஆக்குவிக்கவேண்டும்" என்றான். கணிகண்ணன் அதற்கு உடன்படாமலிருக்கவே வருந்திய மன்னன் மந்திரியார்களின் கூற்றுப்படி அடுத்தநாள் கணிகண்ணனைத் தானும் நீங்காத இளமை பெறுமாறு கவிபாடவேண்டினான். கணிகண்ணன் காஞ்சீ நகரத்தலைமையிட்டும் பாடவே கோபங்கொண்ட கொற்றவன் கணிகண்ணனைத் தன் நகரைவிட்டு நீங்குமாறு உறுத்திக் கூறினான் கணிகண்ணன் ஆழ்வாரிடம் சென்று நடந்த செய்தியை விண்ணப்பம்செய்து விடை தந்தருளுமாறு வேண்ட, ஆழ்வார் தாமும் உடன்வர விரும்பித் திருக்கோயிலுட் சென்று எம்பெருமானைத் தொழுது "கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி மணிவண்ணா நீ கிடக்கவேண்டா—துணிவுடைய செந்நாப்புலவனும் போகின்றேன், நீயுமுன்றன் பைந நாகப்பாய் சுருட்டிக்கொள்" என்று ப்ரார்த்திக்கவே அவ்வெம்பெருமானும் யோகநித்திரையை விட்டெழுந்துவர, மூவரும் அவ்வூரைவிட்டு அருகிலுள்ளதோரிடத்தை யடைந்து அங்கு வஸித்தனர். இங்ஙனம் இம் மூவரும் அப்பதியைவிட்டுப் போனமையால் அத் திவ்யதேசத்திற் பல திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கிற மற்றை யெம்பெருமான்களும் விட்டு நீங்க, அந்நகரம் முழுவதும் ஒளியிழந்து இருள் மூடப்பெற்றது. இதனைக் கண்டு வருந்திய மன்னவன் அவர்களிடத்தைத் தேடியடைந்து கணிகண்ணன் காலில் விழுந்து மன்னிப்பு வேண்ட, அவனும் மீண்டெழுந்தருளும்படி ஆழ்வார்பக்கலில் விண்ணப்பம் செய்ய அவர் எம்பெருமானை நோக்கி "கணிகண்ணன் போக்கொழிந்தான் காமரு பூங்கச்சி மணிவண்ணா! நீ கிடக்கவேண்டும்—துணிவுடைய செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்றன் பைந்நாகப் பாய் படுத்துக்கொள்" என்று வேண்ட, எம்பெருமானும் திருவெஃகாவிற்கு மீண்டெழுந்தருளி அந்நிகழ்ச்சிக்கு ஸ்மாரகமாக முன்போல வலத்திருக்கை கீழாகவன்றி இப்பொழுது இடத்திருக்கை கீழ்ப்படக் கண்வளர்ந்தருளா நின்றான். மூவரும் ஒரு ராத்திரி தங்கியிருந்த இடம் இற்றைக்கும் 'ஓரிரவிருக்கை' என்று வழங்கப்படுகிறது. இவ்விடம் பாலாற்றங்கரையில் உள்ளது.

ஆளவந்தார் அருளிச்செய்த

# கீதார்த்த ஸங்க்ரஹத்தின் பெருமை

(ஸ்ரீமான் உ. வே. வித்வான். தி. அ. அக்காரக்கனி ஸம்பத்குமாராசாரியர், M.A.)

எம்பெருமானார் தரிசனம், விசிஷ்டாத்வைத ஸித்தாந்தம், ஸ்ரீவைஷ்ணவ மதம் என்று பலவாருகக் கூறப்படும் நமது தர்மம் அநாதி ஸித்தமாய் நித்ய நிர்தோஷமாய் அபௌருஷேயமாய் விளங்கும் வேதத்தையே அடிப்படையாகக் கொண்டதொன்ருகையாலே ஸநாதநதர்மமென்றே பெயர்பெற்றுள்ளது. ஆகிலும் தேசகாலவைஷம்யமடியாக இது சிற்சிலஸமயம் சிறிது க்ஷீணமாகிப் பிறகு சில மஹாபுருஷர்களின் பெருமுயற்சியால் தனழத்தோங்கவும் செய்கிறது. இந்த க்ரமத்தில் கலியுகாரம்பத்தில் நம்மாழ்வார் இதற்கு ப்ரவர்த்தகராக அமைந்தார். பிறகும் இது மலிநமாகி ஸ்ரீமந்நாதமுனிகளின் திருவருளால் உத்தரிக்கப் பெற்றது. இவ்வாசிரியர் பல க்ரந்தங்கள் ஸாதித்திருந்தும் அவற்றில் ஒன்றும் தற்சமயம் நமக்குக் கிடைக்கவில்லை. ந்யாயதத்வம், யோகரஹஸ்யம் என்கிற இரண்டு நூல்களின் திருநாமம்மட்டும் தெரியவருகிறது. ஆளவந்தாரும் வேதாந்ததேசிகனும் தமது நூல்களில் ந்யாயதத்வத்தை ப்ரஸங்கித்து அதிலிருந்து சில வாக்யங்களையும் காட்டி யுள்ளார்கள். ஸ்ரீபாஷ்யத்தில் எம்பெருமானார் உதாஹரித்துள்ள நாலைந்து ச்லோகங்கள் ஸ்ரீமந் நாதமுனிகள் ஸாதித்தவையென்று பெரியோர் பணிப்பர்கள். அவை ந்யாயதத்வத்தைச் சேர்ந்தவையா, அன்ரு என்பது விளங்கவில்லை.

ஸ்ரீமந் நாதமுனிகளுக்குப் பிறகு நமது தர்சனத்தை விசேஷமாக வளர்த்தருளின ஆசாரியர் ஆளவந்தார் என்கிற யாமுநாசார்யராவர். இவர் ஸாதித்த க்ரந்தங்கள்— (1) ஆகமப்ராமாண்யம், (2) ஆத்மஸித்தி, (3) ஸம்வித்ஸித்தி, (4) ஈச்வரஸித்தி (இவை மூன்றும் சுருக்கமாக ஸித்தித்ரயமென்று வழங்கப்படும்) (5) புருஷ நிர்ணயம் அல்லது மஹாபுருஷநிர்ணயம் (இது தற்சமயம் லோபித்திருக்கிறது) (6) உலகம் பரவியுள்ள ஸ்தோத்ரரத்நம் என்கிற ஆளவந்தார் ஸ்தோத்ரம், (7) சது:ச்லோகீ, மற்றும் (8) கீதார்த்த ஸங்க்ரஹம்–என்கிற விவ்வெட்டுமாகும். இவற்றுள் ஸித்தித்ரயமென்கிற மூன்று க்ரந்தங்களும் அபூர்ணமாகவே யிருக்கின்றன. பெரும்பகுதி லோபித்துப்போய்ச் சிறுபகுதியே நமக்குக் கிடைத்திருக்கிறது.

ஆளவந்தார் ஸாதித்த இந்த எட்டு திவ்யக்ரந்தங்களையும் நன்கு கற்றுணர்ந்து, இவைகளைப் பெரிய நிதிகளாகக்கொண்டு, இவற்றைப் பின்பற்றியே எம்பெருமானார் தமது க்ரந்தங்களை யமைத்தருளினர். இதை நன்கு புலப்படுத்தவே கீதாபாஷ்ய, வேதார்த்த ஸங்க்ரஹங்களின் தொடக்கத்தில் ஒவ்வொரு ச்லோகத்தால் ஆளவந்தாரை வணங்கினர். ஸ்ரீவைகுண்டகத்யத்தின் ஆரம்பத்திலும் ஆளவந்தார் பெருமையைப் பேசினர். பகவக் கீதாபாஷ்யத்தில் ஒவ்வொரு அத்யாயத்திலும் கீதார்த்த ஸங்க்ரஹ ச்லோகத்தை யுதாஹரித்து அதன் பொருளையும் விவரித்தருளுகிரர், ஆக கீதாபாஷ்யமானது பகவத் கீதைக்கு மட்டுமல்ல, கீதார்த்தஸங்க்ரஹத்துக்கும் உரையாக வமைந்திருக்கிறது என்ருல் மிகையாகாது. கீதார்த்த ஸங்க்ரஹத்திற்கு ரக்ஷையென்னும் உரையிட்ட வேதாந்ததேசிகன் ஆங்காங்கு எம்பெருமானார் பாஷ்ய பங்க்திகளையே அநுவாதம் செய்து அத்துடன் க்ருதார்த்தராகிரர்.

இப்படி எம்பெருமானுர் முதலிய நமது ஆசிரியர்கள் மிகவும் ஆதரித்துப் போந்த இக்கீதார்த்தஸங்க்ரஹம் முப்பத்திரண்டு சிறிய (அநுஷ்டுப்) ச்லோகங்கள் கொண்ட, வடிவில் சிறிய, ஆனுல் குணத்தால் மிகப்பெரியதொரு க்ரந்தமாகும். பகவத்கீதையென்பது எளிய பதங்களைக்கொண்டே தொகுக்கப்பட்டிருந்தாலும் அதன் பொருள் மிகவும் கஹநமாயிருக்கும். பலவிடங்களில் சொன்னதையே திருப்பச் சொன்னதாகத் தோன்றி, 'ஏனிந்த புநருக்தி?' என்று கலங்கப் பண்ணும். சிலவிடங்களில் முன்பின் விரோதம் தோன்றி புத்தி மயங்கும். சிலவிடங்களில் சப்தங்கள் ஸுலபமானவையானுலும் ச்லோகத்தின் தாத்பர்யம் இன்னதென்று தோன்ருது. ஆகவிப்படி பரமகஹநமான கீதாசாஸ்திரத்தில், ஒவ்வொரு அத்யாயத்திற்கும், ஷட்கத்திற்கும் சேர்ந்து தாத்பர்யத்தை நிர்ணயித்துக்காட்டி பஹோபகாரம் செய்தருளின பெருமை ஆளவந்தாருக்கே சேரும்.

கீதையை ஆறு ஆறு அத்யாயங்கள் கொண்ட மூன்று ஷட்கங்களாகப் பிரித்து, ஒவ்வொரு பகுதிக்கும் சேர்த்து ஒவ்வொரு கருத்தைக் காட்டித்தந்த முதல் ஆசாரியர் ஆளவந்தாரே யாவர். சங்கரபாஷ்யத்தில் ஷட்கப் பிரிவு காட்டப்படவில்லை. ஒவ்வொரு அத்யாயத்தின் ப்ரமேயத்தையும் சுருக்கமாகக் காட்டித்தந்து உதவியதும ஆளவந்தாரேயாவர்.

இதில் முதல் ச்லோகம் கீதாசாஸ்த்ரத்தின் கருத்தைச் சுருக்கமாகக் காட்டித் தருகிறது. ஸ்ரீமந்நாராயணனே பரம்பொருள், அவனை பக்தியால் தான் அடையலாம்; கர்மம, ஜ்ஞாநம் என்கிறவிரண்டும் அந்த பக்திக்குக் காரணம்—ஆக இதுவே கீதையின் தேர்ந்த பொருள். அடுத்த மூன்று ச்லோகங்கள் மூன்று ஷட்கங்களின் தாத்பரியத்தை விவரிக்குமவை. ஜ்ஞாநகர்மங்களால் யோகமென்கிற ஆத்மதயாநம் ஏற்பட்டு அதனுல் ஆத்மஸாக்ஷாத்காரமுண்டா மென்கிறது முதல் ஷட்கத்தால். ஜ்ஞாந கர்மங்களால் பக்தியோகமுண்டாகி அதனுல் உண்மையான பகவத் ப்ராப்தியுண்டாகுமென்று இரண்டாவது ஷட்கத்தால் சொல்லிற்று. இவ்விரண்டாலும் சொன்ன வர்த்தங்களை, (அதாவது சித், அசித், ஈச்வரன் எனகிற மூன்று தத்வங்களின் உண்மை ஸ்வரூபம், கர்மம் ஜ்ஞாநம் பக்தி இவைகளின் தத்வம் முதலியவை) மூன்ருவது ஷட்கத்தில் விளக்கப்பட்டுள்ளன.

இதற்கடுத்த, அதாவது ஐந்தாவது முதல் இருபத்திரண்டாவது ச்லோகம் முடிவாக பதினெட்டு ச்லோகங்களால் கீதையின் பதினெட்டு அத்யாயங்களின் ஸாரப்பொருள் விவரிக்கப்பட்டுள்ளது. அவ்வர்த்தங்களை அடைவே விவரிப்போம். (1) தகாத விஷயத்தில் நேசமும் கருணையுங்கொண்டு அதனுல் தர்மத்தை யதர்மமென்றெண்ணிவருந்தி, கலங்கி, கலக்கம்தீர்க்கவேணுமென்று தன்னைச்சரணடைந்த அர்ஜுநனைக் குறித்து (வியாஜமாகக்கொண்டு) கண்ணன் கீதாசாஸ்திரத்தை யவதரிப்பித்தான். (2) அவ்வர்ஜுநனின் மோஹத்தை யொழிக்க, (தேஹத்தில் வேறுபட்டு) நித்யனுன ஆத்மாவின் ஜ்ஞாநம், அஸங்ககர்ம, ஆகிய இவைகளால் உண்டாகும் ஸ்த்திதப்ரஜ்ஞதை யென்கிற நிலை உபதேசிக்கப்பட்டது. (3) எம்பெருமான் திருவுள்ளவுகப்புத்தவிர வேறுபலன்களில் ஆசைகொள்ளாமல், உலகோர்க்கு நல்வழி காட்டுகைக்காக, ஸத்வம் ரஜஸ் தமஸ் என்கிற முக்குணங்களையோ ஸர்வேச்வரனையோ கர்த்தாவென்று நினைத்து நாம் செய்யவேண்டிய கர்மாவைத்

தவறுது செய்யவேணும். (4) ஜ்ஞாநமே கர்மரூபமாக முடியுமென்பதையும், இரண்டும் ஒன்றேயாகுமென்கிற இந்நிலேவின் பெருமையும், ப்ரஸங்கவசத்தால் எம்பெருமானின் (அவதார ரஹஸ்யமும்) ஸ்வபாவமும் பேசப்பட்டன. (5) கர்ம யோகம் எளிது, சீக்கிரத்தில் பயன் தரும், என்றும், அதன் சில படிகளும், ஆத்ம ஜ்ஞானத்தின் வகையும் பேசப்பட்டன. (6) யோகாப்யாஸ விதி, யோகியின் நான்கு வகைகள், அப்ப்யாஸம் வைராக்யம் முதலிய யோகஸாதநங்கள், யோகத்தின் ஸித்தி—அதாவ்து யோகப்ரஷ்டனுக்கு பேறு கிடைக்குமென்பது, பகவத்பஜநத்தின் ஏற்றம் ஆகியவை விவரிக்கப்பட்டன.

(7) பகவானின் உண்மையான தத்வம், அவன் ஸ்வரூபத்தை மறைத்திடும் ப்ரக்ருதியின் தன்மை, அதை வெல்லும் உபாயமானசரணுகதி, பக்தியின்வகைகள், அநந்ய பக்தனின் பெருமைஆகியவை அறிவிக்கப்பட்டன. (8)ஐச்வர்யம்,கைவல்யம்,பகவான் இவைகளேவிரும்புமவர்கள் தெரிந்துகொள்ளவேண்டிய, மற்றும்பற்றவேண்டியவிஷயங்கள்பேசப்பட்டன. (9) பகவந்மாஹாத்ம்யம், மநுஷ்யத்தன்மையிலும் பரனுயிருக்கை,மஹாபுருஷர்களின் ஏற்றம், மற்றும்பக்தியோகத்தின்ஸ்வரூபம் ஆகியவை உபதேசிக்கப்பட்டன. (10)எம்பெருமான் அநந்தகோடி கல்யாணகுணங்களேயுடையவன், எல்லா வஸ்துக்களும் அவனுக்கு அதீநம் என்பதனே யறிந்தால் அவனிடம் பக்தி வளரும். (11) எம்பெருமான் பெருமையை விளக்கும் விச்வரூபத்தைக் காட்டி, பக்தியொன்றுல் மட்டுமே அவனேயறியலாம், அடையலாம் என்பது விவரிக்கப்பட்டது. (12) பக்தியின் பெருமை அதன் உபாயம், அதில் அசக்தனுக்கு ஆத்மத்யாநம், அதன் படிகள், பக்தனிடத்தில் பகவான் செய்யும் ப்ரீதி இவைகள் பேசப்பட்டன.

(13) சரீரம், ஆத்மா இவைகளின் உண்மைஸ்வரூபம், ஆத்[illegible]பதுக்கு அவசியமான நற்குணங்கள், ஆத்மாவுக்கு ஸம்ஸாரபந்தம் ஏற்படுவதற்குக் காரணம், தேஹத்தில் வேறுபட்ட ஆத்மாவை அறியும் வழி இவைகள் சொல்லப்பட்டன. (14) முக்குணங்கள் ஆத்மாவை பந்தப்படுத்தும் வகைகள், அவைகளின் கர்த்ருத்வம், அதை விலக்கும் வழி, மூன்று கதிகளுக்கும் பகவான் தான் காரணம் என்கிற விவை உபதேசிக்கப்பட்டன. (15) புருஷோத்தமனுன ஈச்வரன், அசித்துடன் கூடியிருக்கும், அல்லது அதில் நின்றும் விடப்பட்ட எல்லா ஆத்மாக்களுக்கும் மேம்பட்டவனும். அவைகளேயெல்லாம் வியாபித்து, பரித்து(தாங்கி) ஆள்கின்றுனென்று சொல்லிற்று.(16) தேவாஸுரவிபாகத்தை விவரித்து சாஸ்திரத்திற்குக்கட்டுப்படவேண்டியதுமிகவும் அவசியம் என்று சொல்லிற்று. (17) சாஸ்த்ரத்தால் சொல்லப்படாததெல்லாம் ஆஸுரமென்றும். சாஸ்த்ரவிஹிதமானவைகளில் குணங்கள் காரணமாக(ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று) மூவகையிருப்பதாகவும் சொல்லிற்று. (18) ஜீவனின் செய்கைகளுக்கும் உண்மையில் ஈச்வரன் தான் கர்த்தா எனபதும், முக்குணங்களில் இரண்டையகற்றி ஸத்வகுணத்தையே விரும்பவேணுமென்றும், முமுக்ஷு செய்யும் கர்மாவானது பகவதாராதநரூபமாய்க் கொண்டு பரமபுருஷார்த்தத்தைத் தருமென்பதும், இச்சாஸ்த்ரத்தின் பரம தாத்பர்யமான பக்தியோகத்தின் படியும் பேசப்பட்டன.

இனிமேல் 23, 24 ஆகிய இரண்டு ச்லோகங்களால் கர்மயோக, ஜ்ஞாநயோக பக்தியோகங்களின் ஸ்வரூபமும், அவைகள் மூன்றும் சேர்ந்தே இருக்கும் படியும்

காட்டப்பட்டன. அதாவது (1) தபஸ்ஸு, தீர்த்தயாத்திரை, தாநம், தேவபூஜை முதலான காரியங்கள் கர்மயோகமெனப்படும். (2) இந்த்ரியங்களை ஜயித்து பரிசுத்தமான ஆத்மஸ்வரூபத்தை தியாநம் செய்வது ஜ்ஞாநயோகமெனப்படும். (3) எம்பெருமானிடத்திலேயே முழுப்ரீதி செலுத்தி அவனையே தியானிப்பது முதலியவை பக்தியோகமெனப்படும். ஒவ்வொரு முமுக்ஷுவினிடத்திலும் இம்மூன்றும் சேர்ந்தேயிருக்கும். அதாவது இவைகளில் இரண்டை அடியோடு விட்டுவிட்டு ஒன்றையே பற்றமுடியாது. மூன்றில் ஒன்று முக்கியமாகவும் மற்றவையிரண்டும் அமுக்கியமாகவுமிருக்கலாம்.

(25) அவரவர்கள் செய்யவேண்டிய நித்யநைமித்திக கர்மாக்களும் பகவதாராதனமென்கிற நினைவால் செய்யப்பட்டுக் கீழ்ச்சொன்ன கர்மஜ்ஞாநபக்திகளுடன் சேர்க்கப்படும். இவை மூன்றும் யோகாப்யாஸமூலமாக ஆத்மஸாக்ஷாத்காரத்துக்குக் காரணமாகும்.

(26) இம்மூன்று யோகங்களால் அஜ்ஞாநம் சழிந்து, பகவச்சேஷமான ஆத்மாவின் ஸாக்ஷாத்காரமுண்டாகி, அதனால் சிறந்த பக்தியுண்டாகி, அதனால் பரமபதப்ராப்தியுண்டாகும்.

(27) பகதியோகத்தில் இழிந்தவன் ஐச்வர்யத்தை விரும்பினால், அவனுக்கு அதுவே கிடைக்கும். அல்லது ஆத்மாநுபவமென்கிற கைவல்யத்தை விரும்பினால் இம்மூன்று யோகங்களும அதையும் ஸாதித்துத் தரும்.

(28) இம்மூன்று வகை அதிகாரிகளுக்கும் (அதாவது ஐச்வர்யம், கைவல்யம், எம்பெருமான் இவைகளை விரும்புமவர்களுக்கும்) ஐகாந்திக பகவத்பக்தியிருக்கவேண்டியது அவசியம். கடைசி வரையில் இம்மாதிரியான பக்தியேயிருக்குமானால், அநந்தபலமான [illegible]த்ப்ராப்தியே யுண்டாகும்.

(29) இம்மூவரில் சிறந்தவனான ஜ்ஞாநியென்பவன் தனது ஜீவநத்தையே பகவததீனமாக வைத்துக் கொண்டிருப்பன். பகவானைக்கூடினால் அவனுக்கு மகிழ்ச்சி, பிரிந்தால் துன்பம், (வேறு இன்பதுனபங்கள் அவனுக்குக் கிடையா.)

(30) இவ்வதிகாரி பகவானுடைய த்யாநம், தர்சனம், உக்தி (அவன் கதைகளையும் குணங்களையும பிறர்க்குச் சொல்லுவது) வணங்குதல், துதித்தல், நாமஸங்கீர்த்தனம், இவைகளைச்செய்து, அதனாலேயே ஸத்தை பெற்று, தனது ப்ராணன். மநம், புத்தி, இந்த்ரியங்களை அவனிடத்திலேயே செலுத்தியிருப்பன்.

(31) இவனும் தனது வர்ணாச்ரமாதிகர்மாக்களையும் பக்தி முதலானவற்றையும் அவை ஒரு பலனுக்கு உபாயமென்கிற நினைவைத் தவிர்ந்து, மிக்க ப்ரீதியுடன் செய்யக்கடவன். எல்லாப்பலன்களையும் அளிக்கும் உபாயம் அவ்வீச்வரன் தான் என்றும் எண்ணக்கடவன்.

(32) எம்பெருமானிடத்திலேயே ஸர்வாத்மநா கைங்கரியம் செய்ய ருசியுடையவனாய்க்கொண்டு அவன் திருவடியையே அடையக்கடவன். பகவத்கீதையின் ப்ரதாநமான அர்த்தம் இதுவேயாகும். கீதார்த்த ஸங்க்ரஹம் முற்றிற்று.

ஆக இந்நூலின் தாத்பரியத்தைச் சுருக்கமாக விவரித்தோம். இது தன்னையே வழிகாட்டியாகக்கொண்டு ஸ்வாமி உடையவர் கீதாபாஷ்யமிட்டருளினாரென்பதை ஏற்கெனவே தெரிவித்தோம். தினம் தவறாமல் இந்த க்ரந்தத்தையும் ஸ்தோத்ரம் மாதிரி அநுஸந்திப்பது பக்தர்களுக்கு அவசியமாகும். ... ... ... *

# ஸ்ரீ ராமாநுஜ தர்சனத்துக்கு தௌர்பாக்யமா?

சென்னை அட்வகேட். P. B. அனந்தாச்சாரி

(பிள்ளைபாக்கம் பஹுகுடும்பி)

அஹோபில மடம் முக்கூர் ஸ்வாமியின் இந்த ஆடி மாத ந்ருஸிம்ஹப்ரியா ஸஞ்சிகையில் "இரு கலையாரின் சிந்தனைக்கு" என்ற மகுடமிட்டு ஸமரஸப்ரியன் எனும் புனைபெயர் கொண்டவர் வரைந்துள்ள கட்டுரையையும் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ராதிபர் அதைப்பற்றி விமர்சித்திருப்பதையும் வாசித்தேன். அடியிற்கண்ட சில விஷயங்களை இது ஸம்பந்தமாய் ஆப்தர்களுக்கு அறிவிக்க வேண்டி இதை எழுதலானேன்.

2 ஸமரஸப்ரியருக்கும் அவரது நோக்குள்ள முன்னோர்களுக்கும் 124 வருஷங்களாகத் தோன்றாத ஞானம் திடீரென்று நேற்று ஜூலைமாத முடிவில் தோன்றக் காரணம் என்ன? ஸ்ரீ காஞ்சி தேவராஜ ஸ்வாமி கோயில் யானைக்கு "தென்கலைத்திருமண்தான் போட வேண்டும்" என்று 27—3—1974 ஆம் தேதி ஹைகோர்ட்டு செய்த தீர்ப்பைப் பொறுக்க அவரால் முடியாததே காரணம் என்பது வெட்ட வெளிச்சம்! இதைத் தடுக்கவும் தட்டிக் கழிக்கவும் வடகலையார் 4 வாரங்களாகச் செய்து வந்த பிரம்மப்ரயத்னம் பலிக்காமல் போய் விட்டதும் பலர் அறிந்ததே! மேலும் தோல்வியடைந்து அவமானப் படாமல் இருக்க வேணுமே என்ற நோக்கத்துடன் ஸமரஸ உபதேசம் செய்ய அவர் பிரியப் படுகிறார் போலும். ஆனால், தற்போது இந்த விவகாரம் மூன்றாவது அப்பீலாக [L. P. A. No 45/74] உயர்நீதி மன்றத்தில் [Pending] நடைமுறையில் இருப்பதால் அங்கே தீர்த்துக்கொண்டு டிக்கிரிப்படி முடிவு காண வேண்டுமே தவிர இதைப்பற்றி எழுதுவதும் பேசுவதும் சரியல்ல.

3 தற்போது கடைசீ தீர்மானமாக உள்ள S. A. No 98/73 இல் பிறந்த 27—6—1974 தேதி டிக்கிரிப்படி ஷை கோயில் யானைக்குத் தென்கலைத்திருமண்தான் எந்த இடத்திலும் எப்போதும் சாத்த வேண்டும். வடகலை தர்மகர்த்தாக்களும் நிர்வாக டிரஸ்டியும் ஷை டிக்கிரியை உடனே நிறைவேற்றியிருக்க வேண்டும். ஏதோ சால்ஜாப்புகள் சொல்லி 22—7—1974 வரையில் தாமதித்தார்கள். இதை டிரஸ்டி ஒருவர் ஒப்புக்கொண்டிருக்கிறார். இரண்டாவது அப்பீலில் பிறந்த ஷை ஜட்ஜ்மெண்டுப்படி தென்கலைத்திருமண் போட்டுத் தீரவேண்டும், வேறு வழியில்லை என்று உணர்ந்து ஒரு வாரம் விட்டு ஒரு வாரம் தென்கலைத் திருமண் போட அவர்களே ஆமோதிக்கும்படி ஆயிற்று. இதைக் கேட்ட உடனே அப்பீல் வாதிகள் இருவரில் ஒருவரான ஸ்ரீ ஸுதர்சன தாதாசாரியார் தர்மகர்த்தா பதவியை ராஜிநாமா செய்து விட்டார். இவ்வளவு வைஷம்ய முடையவர்களிடம் தர்மோபதேசம் செய்தால் ஸமரஸப்ரியனின் நோக்கம் நேர்மையாகவும் உண்மையாகவும் இருக்கும். இதை விட்டு விட்டு தென்னாசார்ய தரிசனமே தௌர்பாக்கிய முற்றது என்பது அறியாமை.

4 ஒன்பது வருஷங்களுக்கு முன் காஞ்சி தென்கலை ஸ்ரீ வைஷ்ணவர்கள் சார்பாக செய்த அசல் தாவாவில் [O. S. No 408/1966] ஸ்ரீ காஞ்சி தேவராஜஸ்வாமி தேவாலயமே தென்கலை க்ஷேத்ரமாயிருந்து வடகலை தாதாசாரியர்களின் ஆதிக்கத்தின் பேரில் பல இடங்களில் வடகலைத்திருமண் போடப்பட்டது என்றும் முக்கியமாக ஷை கோயில் யானைக்கு 124 வருஷங்களுக்கு முன் ஏற்பட்ட [A. S No 13/1854] தீர்மானப்படி தென்கலைத்திருமண் போடப்பட்டிருந்ததே மாமூல் வழக்கம் என்றும் பல ஆதாரங்களின் பேரில் தீர்ப்பாகியது. இதை எதிர்த்து வடகலை டிரஸ்டிகள் செங்கற்பட்டு சப் கோர்ட்டில் A S No 1 8/70 என்ற முதல் அப்பீல் செய்தார்கள். இது காஸ்டுடன் தள்ளுபடி செய்யப்பட்டது. இதையும் எதிர்த்துச் சென்னை உயர்நீதி மன்றத்தில் அவர்கள் இரண்டாவது அப்பீல் [S. A No. 98/'73] செய்ததின் பேரில் கனம் நீதிபதி ஸ்ரீ ராமாநுஜம் அவர்கள் பழைய தீர்மானங்களையே உறுதிப்படுத்தி அந்த அப்பீலைச் செலவுடன் தள்ளிவிட்டார். இத்துடன் நில்லாமல் மேலே குறித்த மூன்றாவது அப்பீலை அவர்கள் செய்து இருக்கிறார்கள். தற்போதுள்ள தீர்ப்பின்படி வடகலை டிரஸ்டிகளின் வாதங்களுக்கும், யானைக்குத் தென்கலைத்திருமண் போடுவதில் அவர்கள் செய்து வந்த ஆக்ஷேபணைகளுக்கும் எவ்வித ஆதாரமும், சட்ட ஆதாரமும் இல்லை எனலாம்.

5 இப்படி இருக்க, ஸமரஸப்ரியன் "நீதி எங்கே இருக்கிறது?" என்ற ஒரு கேள்வியைத் தன் கட்டுரையில் விடுத்துள்ளார். இது கோர்ட்டு நடவடிக்கைகளை இழிவு படுத்தும் தோரணையில் தலையங்கம் பெற்றுள்ளது. இத்துடன் நில்லாமல் அதே பங்க்தியில் "மனிதபலமும் பணபலமும் இருந்தால் எதையும் சாதிக்கலாம் என்கிற நிலை ஏற்பட்டிருக்கிறது" என்றும் சிறிதும் பொறுப்பில்லாமலும், துணிச்சலுடனும் எழுதியிருப்பது நீதிமன்றங்களின் மதிப்பையும் நேர்மையையும் பாதிப்பதாக உள்ளது. வடகலை வைஷம்யமுடையோருக்கிருக்கும் மனிதபலத்திலும் பணபலத்திலும் நூற்றில் ஒரு பங்குகூட தென்கலையார்களுக்கு இல்லை என்பது ஸுப்ரஸித்தம். இரண்டு பலமுமுள்ள அவர்கள் நீதிஸ்தலங்களில் தோல்வியடைந்தால் தென்கலை கட்சியில்தான் நீதி இருக்கிறதென்று ஏற்படவில்லையா? தோல்வியால் ஏற்பட்ட ஆவேசம் பொங்க மாறாக எழுதியிருப்பதால் ஸமரஸப்ரியன் மூலம் அவர்கள் அபிப்ராயம் இது என்று நிர்ணயிக்க ஹேதுவாகிறது.

6 தன் சலையாரைத் திருத்த வேண்டியவர் தென்கலையாரை நோவ வைப்பது ஏன்? இவருடைய யோசனையோ, புத்திமதியோ, நியாயப்படியும் பொறுமையுடனும் விவகாரங்களை தீர்த்துக்கொள்ளும் தென்கலையாருக்குத் தேவையில்லை. வடகலை தாதாசார்யார்களும் வடகலை டிரஸ்டிகளும் தென்கலையாருக்கும் தென்னாசார்யஸம்ப்ரதாயத்துக்கும் 120 வருஷங்களாக இழைத்து வந்த கொடுமைகளையும் அக்கிரமங்களையும் நீதி மன்றங்கள் இவர்களுக்கு அவ்வப்போது உணர்த்திய சீரிய, கூர்மையான புத்தி மதியையும் நினைவில் வைத்துக்கொண்டு இனியாவது அவரவர்கள் கலாசாரப்படியும் அந்தந்த ஸம்ப்ரதாய நடைமுறை (மாமூல்) வழக்கப்படியும் கைங்கரியங்கள் நடக்கட்டும் என்று விட்டு விடுவதே உத்தமமான ஸமரஸம். இந்த அவசியத்தை புத்தூர் ஸுதர்சன பத்ராதிபர் வெகு விமரிசையாகத் தகுந்த காரணங்களைக் காட்டி விளக்கியுள்ளார். கலாசாரத்தில் குறுக்கிட்டால் புது வழக்குகள் பல கிளம்பும். சகிப்புத் தன்மையே [tolerance] தென்கலை வடகலை ஒற்றுமைக்கேற்ற வழி. இதை வடகலையார் பின்பற்றியிருந்தால் வ்யாஜ்யம் தொடர 1850 முதல் ப்ரஸக்தியே உண்டாகியிருக்காது. சற்றேறக் குறைய இருநூறு வருஷங்களாகக் கோயில் திருமலை, பெருமாள் கோயில் என்று ப்ரஸித்தமாகியிருக்கும் மூன்று முக்கிய திவ்யதேசங்களிலும் நூற்றுக்கணக்காக நடந்து வரும் இந்த, மிகவும் வருந்தத்தக்க தென்கலை வடகலை வியாஜ்யங்களில், வடகலையார் எந்த ஓர் வியாஜ்ஜியத்திலாவது வெற்றி பெற்றதாக விரலை மடக்க முடியுமா? இதிலிருந்தே எந்த கட்சி உண்மையிலும் நேர்மையிலும் நின்று வருகிறது என்பதும், எந்த கட்சி பொய்ம்மையிலும் அநீதியிலும் மேன்மேலும் அடிவைத்து வருகிறதென்றும், ஒரு குழந்தையும் அறியலாமல்லவா! இப்படியிருக்க ஸமரஸப்பிரியன் புத்திமதி எந்த கட்சியினரிடம் திரும்ப வேண்டும் என்பதை எளிதில் உணரலாம்.

7 ஸமரஸப்பிரியனின் வியாஸத்தில் மற்றொரு விஷயமும் கண்டிக்கத்தக்கது. "அர்ச்சா ரூபியான எம்பெருமான் எந்தப் புண்ட்ரத்தை ஸ்பர்ப்பித்தாலும் சாத்திக் கொள்கிறான். அவன் என்ன விலக்கவா போகிறான்" என்று எழுதியதோடு நில்லாமல் யானை, சுவர் முதலியனவும் நாம் எதைப்போட்டாலும் விலக்கப் போவதில்லை" என்று எழுதியிருப்பதைப் பார்த்தால் இவர் ஏன் நாஸ்திகத்தில் இறங்கி விட்டார் என்று பரிதாபப்பட வேண்டியிருக்கிறது. பெருமாள் புனைந்த திருமண் காப்பையும் சுவரிலிடும் திருமண் காப்பையும் சமமாக பாவிப்பவர் தெய்வ நம்பிக்கையையே இழந்து விட்டாரா என சந்தேகிக்கலாகிறது. இவர் சம்பிரதாயத்தையே காற்றில் விட்டார். தெய்வத்திலும் நம்பிக்கையிழந்து, அசேதனப் பொருளுக்கும் திர்யக்குக்களுக்கும் அர்ச்சா ரூபியை சமப்படுத்திப் பேசுகிறார். ஆகையால் இவர் போன்றவர்களின் யோசனையால் வடகலை பாத்திரத்துக்குத்தான் தௌர்பாக்கியம் என்பது திண்ணென விளங்குகிறது. "திருமண் தரித்துக் கொள்வது மிகவும் அவசியம்" என்று தொடங்கிய வியாஸத்தை திருமண் என்ற திவ்ய நாமத்தை வெறும் மண்ணாக பாவித்து சுவரில் பூசிவிட்டு எம்பெருமானகளுக்குத் திலகம் இட்டால் போதுமென்று ஒரு கிளர்ச்சியைக் கிளப்பி விட்டிருக்கிறார்

[தொடர்ச்சி ரேப்பர் 3ம் பக்கம் பார்க்க.]

[ 36-வது பக்கத்தின் தொடர்ச்சி ]

8 "ஏதோ சில மஹாவித்வான்கள் சாஸ்திரம் கற்றபின் ...................... கண்டபடி பேசியும், எழுதியும் வருகிறார்கள்" என்று மறைமுகமாகப் பண்டிதோத்தமரைத் தூஷிக்கிறாரே. இவர் ஸமரஸப் பிரியரா? சாச்சைபபிரியரா? யாரைக் குறிப்பிட்டிருக்கிறார் என்று யாவரும் அறியலாம். ஆகிலும நேர்முகமாக எழுதப் பின வாங்கும் இக்கோழையைப் பற்றி மேலும் கண்டிப்பதில் பிரயோஜனம் இல்லை என்று விட்டு விட்டேன்.

9 இந்த ஸமரஸப்ரியன் பூடகமாக ஒரு கேள்வியையும் கேட்டிருக்கிறார். அதாவது "நீதி மன்றங்களில் வழக்காடிப் பல லக்ஷ ரூபாய்களைப் பாழாக்கி வெற்றி தோல்விகளைப்பெறுவதனால், ஸ்ரீவைஷ்ணவனாகப் பிறந்து கெட்டுப்போகிறவர்களுக்கு என்ன பயன் ஏற்படப்போகிறது என்று. இந்தக் கேள்வியை வடகலை கக்ஷிக்காக வீண்வியாஜ்யம் தொடருவோரையும் உண்மைக்கும் ரிகார்டுகளுக்கும் சட்டத்துக்கும் விரோதமாகக் கடைசி கோர்ட்டு வரை செலவைப் பார்க்காமல் இதில் பிடிவாதம்பிடிப்பவரையுமே நோக்கிக் கேட்கவேண்டியது.





# கடிதம்

ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளையின் திருவவதாரஸ்தலமான சேங்கனூரென்னும் திருத்தலத்தில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ வேங்கடாசலபதி ஸ்வாமி ஸன்னிதியில் ஆனந்தஹு ஆடி மீ 25வ (10—8 74) ஷ தேவாலயத் திருப்பணியை முன்னிட்டு ஸ்ரீ ஸுதர்சன ஹோமமும் விசேஷ திருமஞ்சனங்களும் நடைபெற்றன, அன்று மாலை ஸ்ரீ வைஷ்ணவ மஹாநாடு வெகு விமரிசையாக நடைபெற்றது. ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன பத்ராதிபரும் ஸ்ரீ ராமாநுஜ மிஷன் உபதலைவருமான ஸ்ரீ உ. வே. S. க்ருஷ்ண ஸ்வாமி ஐயங்கார் M. A. B. L. ஸ்வாமியின் அக்ராஸனத்தில் சித்ரகூடம் வித்வான் ஸ்ரீ உ. வே. அஷ்டகோத்ரம் வெங்கடாசாரியஸ்வாமி பெரிய வாச்சான் பிள்ளையின் தனிச்லோகி வியாக்யானம் பற்றியும், சேங்கனூர் மஹாத்மா ஸ்ரீ க்ருஷ்ண ப்ரேமி ஸ்வாமி பெரிய வாச்சான் பிள்ளையின் வைபவம் பற்றியும், திருநகரி எம்பார் ஸ்ரீ உ. வே. திருவேங்கடாசாரியர் ஸ்வாமி திருப்பாவை வைபவம் பற்றியும் உபந்யஸித்தனர். அக்ராஸனம் வஹித்த ஸ்வாமியும் ஸ்ரீ பெரிய வாச்சான் பிள்ளை ஸாதித்தருளிய வியாக்யானங்கள் பற்றி யாவரும் மகிழும் வண்ணம் உரையாற்றினர். பின்னர் சிதம்பரம் ஸ்ரீ உ. வே. S ராமஸ்வாமி ஐயங்கார் (State Chief Organiser Sri Ramanuja Mission, India) வந்தனோபசாரம் தெரிவிக்க மகாநாடு நிறைவு பெற்றது.

(S. R.)

P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த „
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர „
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர „
6. ரஹஸ்யார்த்த விளக்க „
7. வேதாந்தப் பொருள் விளக்க „
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க „
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடு
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தி பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் „
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்

SRI T. A. ANANTHALWAN,
Manager, GRANTHAMALA OFFICE, Kancheepuram-631503
என்ற விலாசத்திற்கு அனுப்புக.

If un-delivered please return to :
P. B. ANNANGARACHARYA,
KANCHIPURAM. Pin Code 631503



To
Sriman / Srimathi



406 Sri P. A. Thiruvengadachariar,
No. 16, M. M.Sannadhi St.,
*Sriperumbudur*

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, Kancheepuram-631503.